# பழனிப் பாமாலைகள்

(மூலமும் உரையும்)



ஆசிரியர்

சிரவையாதீனம்

தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்

# பழனிப் பாமாலைகள்

(மூலமும் உரையும்)

ஆசிரியர்

சிரவையாதீனம்

**தவத்திரு கந்தசாமி சுவாமிகள்**

குறிப்புரை

சிரவையாதீனக் கவிஞர்

**பெரும்புலவர் ப.வெ. நாகராஜன்**



**தமிழ்க்கடவுள் முருகன் இலக்கிய ஆய்வு**

**மாநாட்டுக் கருத்தரங்க வெளியீடு**

**சிரவையாதீனம்**

**டிசம்பர் 2007**

சிரவைக் கௌமார சபை

| | | |
|---|---|---|
| வெளியீட்டு எண் | : | 269 |
| | | (தமிழ்க்கடவுள் முருகன் இலக்கிய ஆய்வு மாநாட்டுக் கருத்தரங்க வெளியீடு) |
| நூல் பெயர் | : | பழனிப் பாமாலைகள் (மூலமும் உரையும்) |
| நூலாசிரியர் | : | தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் |
| உரை | : | பெரும்புலவர். ப.வெ.நாகராஜன் |
| முதல் பதிப்பு | : | 27.12.2007 |
| படிகள் | : | 1000 |
| விலை | : | ரூ. 20.00 |

**நூல் கிடைக்குமிடம் :**

**தலைவர்,**

**கௌமார மடாலயம், சின்னவேடம்பட்டி,**

**கோயமுத்தூர் – 641 006**

**தொலைபேசி : 0422 – 2666370**



சிரவையாதீனம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள்
(நூலாசிரியர்)



# ஆசியுரை

**தவத்திரு. குமரகுருபர சுவாமிகள்.**
ஆதீன கர்த்தர், கௌமார மடாலயம்,
சின்னவேடம்பட்டி, கோயமுத்தூர் - 641 006

*தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் சிரவையதீனத்தின் இரண்டாவது குருமகா சந்நிதானமாக அருட்செங்கோல் செலுத்தியவர். இச் சுவாமிகள் பெரும் கவிஞராகவும் விளங்கி வந்தார்கள். பக்தமான்மியம் என்னும் பாகவதர்களின் பெருமையை விளக்கும் பெருங்காப்பியம் ஒன்று, தல புராணங்கள் மூன்று, பற்பல சிற்றிலக்கிய வகைகள், ஏராளமான தோத்திரப்பதிகங்கள் எனப் பதினாலாயிரத்திற்கு மேற்பட்ட தமிழ்ப்பாக்களை இயற்றியருளியவர்கள். பாடற்பொருட் சிறப்பாலும் சொற்செறிவாலும் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் கொங்குநாட்டுக் கச்சியப்பமுனிவர் என அறிஞர்களால் போற்றப்படுகிறார்.*

*அத்தகைய சிறப்பு வாய்ந்த சுவாமிகள் திருப்பழனித்தொடர்பாகத் திருப்பள்ளியெழுச்சி, மூன்று தோத்திரப்பதிகங்கள், ஒரு மாலை ஆக ஐந்து சிற்றிலக்கியங்களைப் படைத்துள்ளார். அவையாவும் ஒன்றாகத் தொகுக்கப்பட்டு ஆதீனக்கவிஞர் திரு.ப. வெ. நா அவர்களின் குறிப்புரையுடன் பழனிப்பாமாலைகள் என்னும் பெயரில் இப்போது வெளியிடப்படுகிறது.*

*1998 இல் கௌமார மடாலயத்தில் நடைபெற்ற தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் நினைவுப் பொன்விழாக் கருத்தரங்கில் இந்நூலை வெளியிட விரும்பி முயற்சி எடுத்தோம். தவிர்க்க இயலாத காரணத்தால் அப்போது வெளியிட இயலவில்லை. இப்போது தஞ்சாவூர்த் தமிழ்ப்பல்கலைக் கழகத்தின் ஓலைச்சுவடித் துறையோடு இணைந்து 2007 டிசம்பர் 27,28,29 தேதிகளில் தமிழ்க்கடவுள்முருகன் இலக்கிய ஆய்வு மாநாட்டுக் கருத்தரங்கம் ஒன்றுக்கு ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. முருகன்பற்றிய கருத்தரங்கில் அறுபடைவீடுகளுள் மூன்றாவதும், கௌமாரமடாலயத்தின் குருபீடத்தலமும் ஆகிய திருப்பழனியைப் போற்றும் பாமாலைகள் வெளிவருவது சாலச் சிறப்புடையது. அன்று தடைபட்டது இதற்காகத்தான் போலும்.*

*இப் பதிப்பு முயற்சியில் ஈடுபட்ட அன்பர்கள் அனைவரும் தண்டாயுதபாணிக் கடவுளின் திருவருளாலும் குருவருளாலும் எல்லா நலங்களும் பெற்றுச் சிறக்க எம் குருநாதரின் பொன்னார் திருவடிகளை நீள நினைந்து வாழ்த்துகிறோம்.*

*தமிழ்முருகன் சால்பதனில் தங்கள் அறிவை*
*அமிழ்த்தும் கருத்தரங்கின் அன்று- இமிழ்த்தபுகழ்ச்*
*சீர்ப்பழனிச் செந்தமிழைச் சேரச் சுவைத்திடுவோர்*
*கூர்ப்புடைய வாழ்வடைகு வார்.*

# பதிப்புரை

சிரவையாதீனக்கவிஞர்
புலவர். ப. வெ. நாகராஜன்

பழனிப்பாமாலைகள் என்னும் இந்தத் தொகுப்பில் பழனியாண்டவர் திருப்பள்ளி எழுச்சி, திருப்பழனிமலைப்பதிகம், பழனிக்குருமணிப்பதிகம், திருப்பழனிப் பதிகவந்தாதி, பழனி தண்டபாணியன்மாலை ஆகிய ஐந்து சிற்றிலக்கியங்கள் இடம் பெற்றுள்ளன. இவை யாவும் சிரவையாதீனத்தின் இரண்டாவது குருமகா - சந்நிதானம் தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் அவர்களால் இயற்றப்பட்டவை ஆகும்.

ஸ்ரீலஸ்ரீ கந்தசாமி சுவாமிகள் (1892-1948) அண்மைக்காலத்தில் கொங்குநாட்டில் தோன்றிய மிகப் பெரும்கவிஞர். பக்தமான்மியப் பெருங்காப்பியம், கோவை, கலம்பகம், தலபுராணங்கள், அந்தாதி வகைகள், மாலைகள், பதிகங்கள், வண்ணங்கள் எனப் பல்வேறு வடிவங்களிலும் 15,000 பாடல்களுக்கு மேல் இயற்றியவர். திருப்பழனித் தொடர்பாக அவரால் யாக்கப்பெற்ற ஐந்து பிரபந்தங்களும் குறிப்புரையுடன் இங்கு பதிப்பிக்கப் பெற்றுள்ளது. நூலாசிரியர் வரலாற்றுக் குறிப்புகள் பழைய வெளியீடுகள் பலவற்றிலும் இடம் பெற்றிருப்பதோடு இப்பொழுது தனிநூலாகவும் கௌமார மடாலயத்தால் வெளியிடப்பட்டுள்ளது.

இந்நூல்கள் யாவும் 1959 ஆம் ஆண்டில் கிரநத்தம் ஆர். பட்டலிங்க முதலியார் அவர்களின் பொருளுதவி கொண்டு அவர் தகப்பனார் நினைவு மலராகச் சிரவைக் கௌமார சபையரால் வெளியிடப்பட்டுள்ளன. அதில் பாடல்களுக்கு ஆங்காங்கு சில குறிப்புகளும் இடம் பெற்றுள்ளன. அக் குறிப்புகளை எழுதியவர் பெயர் அந்நூலில் காணப்படாவிடினும் உரைப்போக்கை நோக்குமிடத்து அது திருவாமாத்தூர் திரு. தி. செ. முருகதாச ஐயா அவர்களால் வரையப்பெற்றது எனத் தெரிகிறது.

அதில் பழனி ஸ்ரீ தண்டாயுதபாணி தேவஸ்தானத்தின் அன்றைய நிர்வாக அதிகாரி உயர்திரு. எம். வீரபாகு பிள்ளை அவர்கள் சுருக்கமான, ஆனால் இன்றியிமையாத செய்திகள் அடங்கிய முகவுரை ஒன்றை எழுதியுள்ளார். அதில் அவர், "தவத்திரு கந்தசாமி சுவாமிகளால் 30 ஆண்டுகளுக்கு முன் தவத்திரு. சாது சுவாமிகள் விருப்பத்தின் படி பாடப்பெற்ற பள்ளியெழுச்சி, பதிகங்கள் பதிக அந்தாதி, மாலை ஆகியவைகள் அடங்கியது இந்நூலாகும்" எனக் குறிப்பிட்டுள்ளார். இதனால் நூல் தோன்றிய காலமும் (1929), காரணமும் அறியப்படுகிறது.

முதலாவதாகிய திருப்பள்ளியெழுச்சி, "பழனியால் கிரித்தண்டபாணி எம் பரனே! — எம் பெருமான்பள்ளி எழுந்தருள் வாயே" என்றும் மகுடம் பெற்று விளங்கும் 12 எண்சீர் வருத்தங்களால் ஆனது. துயிலெடைநிலை எனப் பழந்தமிழ் இலக்கணம் கூறுவதற்கேற்ற இலக்கியம் ஆகிய இப்பிரபந்தம் இடைக்காலத்தில் தோன்றிய திருப்பள்ளியெழுச்சியின் மரபு மாறாமல் அமைந்துள்ளது குறிப்பிடத்தக்கதாகும். இதில் முருகப்பெருமானின் பரத்துவம், "என் இசை தயிலம் ஒத்து எங்கனும் நிறையும்" (5) எனவும் "இக்கரை இசைந்து நின்று அக்கரை ஏற்றும்" (11) எனவும் சுட்டப்பெறுகிறது. திருப்புகழைப் போற்றும், "முக்கனி இரசமும் அமிழ்தமும் கூட்டும் முறையினும் மிகச்சுவை முதிர்தரும் இன்பம் மிக்கவிர் தரும் அருணாசலநாதன் விளம்பு இசைத்திருப்புகழ் வளம்" (11) என்னும் பகுதி சுவையானது.

இரண்டாவதாகிய திருப்பழனிமலைப்திகம் எண்சீர் விருத்தத்தாலான 14 பாடல்களால் ஆனது. முருகனுடைய பதி எது என வினவுவார்க்கு அது சிவகிரி, அவினன்குடி ஆம் திருப்பழனி மலையே எனப் பதில் எரைப்பதாக அமைந்துள்ளது. இதன் முதல் இரண்டு அடிகளில் பழனிமலையின் சிறப்பும் கூறப்பெற்றுள்ளன. பழனிமலைக் கோயில் சேர மன்னர்களின் திருப்பணிகளைப் பெற்றது என்றும் வரலாற்றுச் செய்தி, "சேரர்பிரான் திருப்பணியின் விருப்பு அணி ஆர் காட்சிச் சிவகிரி" (4) எனக் குறிப்பிடப்பட்டுள்ளது. ஐந்தாம் பாடலில் ஊர்வளம் கூறும் பகுதியில் மன்மதனுக்குரிய சிறந்த பொருள்கள் எல்லாம் பழனியில் உள்ளது எனக் கூறுவது இலக்கிய நயம் மிக்கதாகும்.

பன்னிரண்டாம் திருப்பாடல் சைவ மகாமந்திரமாகிய திருவைத்தெழுத்தை விளக்குகிறது. ஈற்றுப்பாடலில் பழனித் தலடாயுத பாணியே சிரவை இராமானந்த சுவாமிகள் வடிவில் வந்து தம்மை ஆட்கொண்ட பரமகுருநாதர் என்று சுறுவதன் வழி கௌமார சித்தாந்த நிச்சயத்தைக் காட்டுகிறார்.

அடுத்த பழனிக் குருமணிப் பதிகம் துள்ளலோசை மிக்க எண்சீர் விருத்தங்கள் பன்னிரெண்டும் காப்புவெண்பா, நூற்பயன் விருத்தம் என இரண்டும் கொண்டு விளங்குகிறது. " மலைப்பழனித் தலைக்கோயில் வயங்குகுரு மணியே" என்பது இதன் மகுடம் ஆகும். ஐம்பூதங்களில் மெய்ஒளிஊறுஓசை நாற்றம் அமைந்துள்ளதைப் பற்றிய செய்தி நான்காம் பாடலில் இடம் பெற்றுள்ளது. கலியுகத்தில் கந்தப்பெருமான் தன்னை வழிபடுவோர்க்கு எளிதில் எல்லா வரங்களையும் அருளி ஆட்கொள்வார் என்னும் கருத்தை உட்கொண்டு, கலிகாலம், தீயகாலம் ஆகாது எனச் சாதுரியமாகக் சுறும் ஐந்தாம்பாடல் உளத்திற்கு உற்சாகம் ஊட்டுவதாகும். மூவகை வினைகள் பற்றி ஏழாம் பாடலும், மும்மலங்கள் பற்றி ஒன்பதாம்பாடலும், சமய வாழ்விற்குப் பகையானவர்களைப் பத்தாம் பாடலும், சுவாமிகளின் வேண்டுதலைப் பன்னிரெண்டாம் பாடலும் தெரிவிக்கின்றன.

நான்காவதாகிய திருப்பழனி பதிக அந்தாதியும் எண்சீர் விருத்தங்களால் இயன்றதே ஆகும். காப்பு வெண்பா ஒன்றினையும் நூலகப் பன்னிரு பாக்களையும் பெற்றுள்ளது. பதிகம் அந்தாதித் தொடை பெற்று நடக்கிறது, மண்டலித்ததாகக் கூறுதல் சிறப்பன்று. முதல்பாடல் தியானத்திற்குரிய திருமேனி வருணையாக அமைந்துள்ளது. கௌமாரத் தொண்டர்களின் சிறப்பினை ஐந்து, எட்டாம் பாடல்கள் காட்டுகின்றன. மும்மலங்களால் நேரும் தீமைகளைப் போக்கி நல்லறிவு கொளுத்தி ஆட்கொள்ள வேண்டும் என்பதே இந்த பதிகத்தின் பொதுப் பொருண்மை ஆகும்.

இறுதியில் அமைந்துள்ள பழனித்தண்டபாணியன் மாலை காப்புச் செய்யுள் ஒன்று, நூல் 102, வாழி விருத்தம் ஒன்று ஆக மொத்தம் 104 பாடல்களால் இயன்றது. இம்மாலை பழனிச் சிவகிரித்

கண்டமாலையர்களே என்றும் மகுடம் பெற்ற எழுசீர் விருத்தங்களால் இயன்றது ஆகும் இதில் பல பாடல்கள் இலக்கிய நயம் மிக்கு விளங்குகின்றன.

பழனியில் தாமரைக் குளங்கள் நிறைய உள்ளன. அவ்வூரிலுள்ள பெண்கள் அவற்றில் திளைத்து நீராடுகின்றனர். பலவகையான வாசனைப் பொருட்களைப் பயன்படுத்துவதால் அக்குளங்களின் நீரும் நறுமணம் பெற்றுவிடுகிறது என்கிறார். இத்தகைய புனையை நாம் பல இலக்கியங்களில் கண்டு மிகவும் பழகி விட்டோம். " புதுப்புனல் குடையும் மாதர் பூவொடு நாவி பூத்த கதுப்பு உறு வெறியே நாறும் கருங்கடல் தரங்கம் " என்னும் கம்பன் கவியை ( பால. நாட்டுப்பாடல் 11 ) அறியாதார் யார்? ஆனால் நம் சுவாமிகள் இதற்குமேலே ஒருபடி செல்கிறார். புனிதத் தலமான பழனியின் நீர் நிலைகளும் தெய்வீகத் தீர்த்தங்கள் அல்லவா? அதில் பக்தியுடன் முழுகுவோர்க்கு வேண்டிய வரங்களையும் மெய்யறிவையும் வழங்க வல்லவையல்லவா? அதை எண்ணி இம் மாலை உடையார் மங்கையர்தம் வாசனைச் சரக்குகளின் நறுமணத்தை நீர்நிலைகள் ஏற்றுக் கொண்டு அதை உயிர்களை உய்விக்கும் அருள்மணமாக மாற்றி விடுகிறது என்கிறார். குளத்தின் இரசாயன மாற்றத்திற்குக் கற்பனையும் களைத்ததல்ல.

" சிமிழ்நிகர் தனத்தார் உடற்நலம் பகம்ஆம்
சேறு கொண்டு உயிர்க்கு அருள் வாசம்
திமிர்தல் செய் கமலத் தடம்பொலி பழனி " (3) என்பது அவர் வாக்கு.

தவத்திரு கந்தசாமி சுவாமிகளின் நூல்கள் எல்லாவற்றையும் ஒருமுறை மேலெழுந்த வாரியாகப் பார்த்தாலே அவற்றின் ஆதார சுருதி நிலையாமை பற்றிய உறுதியும், வைராக்கியமுமே என்பது தெற்றனெ விளங்கும். இந்த மாலையிலும், 7,8,9,16,20,24,25,26,33,37,47,56,64,90,96,99 முதலிய பாடல்களோடு மேலும் பலவற்றிலும் நிலையமையையும், உலகியல் இன்பங்களால் ஈர்க்கப்பெறாத வைராக்கியத்தையும் காண முடிகிறது. ஒரு சோற்றுப்பதம் வருமாறு :

" வார்த்திகம் நெருங்கும் உடற்சிறை யிடைசெய்
வகை மறந்து அலைதரும் எனைக்கண்
பார்த்து குக போகப் பாசம் முற்று ஒழித்துப்
பாதுகாத்து அருள்கடன் உனதே." (58)

சைவ சமயம் இறைவனை அடைவதற்கு நான்கு வகையான நெறிகளை வகுத்துள்ளது. சரியை, கிரியை, யோகம், ஞானம் என்றும் அவற்றுள் முதல் மூன்று நெறிகளில் முயல்வோர் பதமுத்திகளையும் ஞானியர் பரமுத்தியையும் அடைவர் என்பது சாத்திரம். சரியை, கிரியை, யோகத்திற்கு உரியன முறையே சாலோகம், சாமீபம், சாரூபம் என்னும் பதங்கள் ஆகும். யோகியர்க்குரிய சாரூபம் என்பது தன்னால் தியானிக்கப்பெற்ற கடவுளின் வடிவத்தைப் பெறுதல் ஆகும். இந்த சாத்திரக் கருத்தையும் பழனியின் இயற்கை வளத்தையும் இணைத்து ஒரு கற்பனை செய்கிறார். பழனித்தண்டபாணியைத் தியானிக்கும் யோகியர் பற்பலர். இவர்கள் அனைவரும் முடிவில் சுப்பிரமணிய சாரூபம் பெறுவர். அப்போது அவர்களுக்கு வழங்க மயில்களும், வேல்களும், சேவல்களும் வேண்டுமல்லவா? அதற்காகத்தான் அவை பழனியில் சேமித்து வைக்கப்பட்டுள்ளன என்கிறார். அந்தத் தற்குறிப்பேற்றம் வருமாறு :-

" மகிமைமா தவக்கெள மாரர்சா ரூபம்
மருவுகால் கைக்கௌ வரம்புஇல்
சிகிஅயில் சேவல் மலிஅணிப் பழனி" (54)

இவ்வாறு சாத்திரக் கருத்துகளும், தோத்திர வகைகளும், இலக்கிய நயங்களும் இம்மாலையில் நிறைய உள்ளன. சொல்லணிகளுக்கும் குறைவில்லை. 65 முதல் 85 வரையான பாடல்களின் பிற்பாதி சிலேடையாக உள்ளன. இம்மாலையைப் பற்றிய செய்திகளை எல்லாம் குறிப்பிட்டுக் கூறினால் இப்பதிப்புரை மிக நீண்டுவிடுமாதலின் வாசகர்களே படித்து சுவைக்க வாய்ப்பாக இத்துடன் அமைகிறேன்.

தவத்திரு. கந்தசாமிசுவாமிகள் இறைவன் திருவடிநிழலை அடைந்தது 10-12-1948 வெள்ளிக்கிழமை அன்று ஆகும். இந்த ஆண்டு சுவாமிகளின் நினைவுப் பொன்விழா ஆண்டு. அதனையொட்டிச் சிரவையாதீன கர்த்தர் தவத்திரு. குமரகுருபர சுவாமிகள் அவர்கள் கௌமார மடாலயத்தில் கருத்தரங்கம் ஒன்றினுக்கு ஏற்பாடு செய்துள்ளார். இவ்வாண்டு நவம்பர் 27,28 ஆம் தேதிகளில் நடைபெற உள்ள அந்தக் கருத்தரங்கில் ஆய்வுக்கட்டுரைகளைத்தவிர, ஸ்ரீ கந்தசாமி சுவாமிகளின் வாழ்க்கை வரலாற்றையும், அவருடைய நூல்களில் சிலவற்றையும் வெளியிடக் கருதியுள்ளோம்.

சிரவையாதீனத்தோடு ஆதிகாலம் முதல் நீங்காத தொடர்புடைய திருப்பழனித் தலத்தைப்பற்றிய நல் வருவது மிக இன்றியமையாதது என்ற கருத்தில் தவத்திரு. குமரகுருபர சுவாமிகள், பழனி இந்து சமய அறநிலைய ஆட்சித்துறை இணைஆணையர் அவர்களோடு தொடர்பு கொண்டார்.

தவத்திரு. சுவாமிகள் இந்நூலின் பதிப்புப்பணியை ஏற்குமாறு அருளாணையிட்டார். நூல் அளவில் பெருத்து விடக் கூடாது என்னும் உணர்விடன் இன்றியமையாத இடங்களில் மட்டும் குறிப்புரை வரைந்துள்ளேன். வெளிப்படையான பகுதிகளில் விளக்கங்கள் இடம் பெற வில்லை.

இன்றைய மாணவ குலமும் எளிதில் படித்துப் பயன்பெறுவதற்காகப் பாடல்கள் - யாப்பிற்குத் தடை இல்லாத அளவு - சந்தி பிரித்துக் கொடுக்கப்பட்டுள்ளன. சின்னவேடன்பட்டி சுவடிக்கலைஞர் திரு.ஆர். கிருஷ்ணராவ் அவர்கள் சந்தி பிரித்து எழுதிக் கொடுத்தார். அவருக்கு என் நன்றி உரியது.

தவத்திரு. இராமானந்த அடிகளார் மேனிலைப்பள்ளித் தமிழாசிரியர் திரு. கு. சிவலிங்கம் அவர்கள் அச்சிற்கான கையெழுத்துப்படியைத் தம் பல்வேறுப்பட்ட பணிகளுக்கிடையே எழுதிக் கொடுத்தார். அவருக்கு என் நல்வாழ்த்துக்களையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

பழனிப் பாமாலைகள் என்னும் இந்நூல் பதிப்பாகி வெளியாகும் வரை இத்துறையில் ஈடுபட்ட துறைத்தலைவர்கள், அலுவலர்கள், பணியாளர்கள், அச்சகத்தார் ஆகிய எல்லோருக்கும் என் பணிவான நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

சிரவையாதீனம் தவத்திரு. குமரகுருபர சுவாமிகள் அவர்கள் ஆதீன நூல்கள் எல்லாம் நல்ல பதிப்புகளாக வெளிவந்து தமிழ்கூறும் நல்லுலகம் முழுவதிலும் பரவ வேண்டும் எனப் பேரவாக் கொண்டுள்ளார். சென்ற ஆண்டு வண்ணக்கபம் தண்டபாணிசுவாமிகள் நினைவு நூற்றாண்டுக் கருத்தரங்கத்தைத் தஞ்சாவூர்த் தமிழ் பல்கலைகழகத்தின் ஓலைச்சுவடித் துறையோடு இணைந்து சிறப்பாக நிறைவேற்றினார். அந்த கருத்தரங்கம் ஒரு பத்து நூல்கள் வெளிவரக் காரணமாக அமைந்தது. அவ்வாறே தவத்திரு. கந்தசாமி சுவாமிகள் நினைவுக் கருத்தரங்கில் இயன்ற அளவு நூல்களைக் கொணர முயன்று வருகிறார். இத்தகைய அரிய பணிகளுக்காக அவருக்கு நன்றி தெரிவிப்பது சூரியனுக்கும், மேகத்திற்கும் நன்றி தெரிவிப்பதைப் போன்ற உபசாரமாகிவிடுமோ என அஞ்சுகிறேன்.

இந்தப் பதிப்பினைக் கண்ணுறும் அறிஞர் பெருமக்கள் இதன் நிறைகுறைகளை இப்பதிப்பாசிரியருக்கு தெரிவித்தால் அடுத்த பதிப்பு இன்னமும் செம்மையடைய வாய்ப்பாக இருக்கும். எனவே அம்முறையில் உதவ விழைகிறேன்.

என்னுடைய தமிழ்ப் பணிகளை ஏற்று ஊக்குவிக்கும் அன்பர்கள் அனைவருக்கும் பணிவான நன்றிகளை உரித்தாக்கி மகிழ்கின்றேன்.

## 1. பழனியாண்டவர் திருப்பள்ளியெழுச்சி
(எண்சீர் விருத்தம்)

வாழி ! எம் குடி-முழு தாண்டுமெய் ஞான
வாழ்வினில் அமைந்திட வரம்பில்மெய் யருளால்
ஊழிகள் தோறும்நின் றொளிர்தரு மகிமை
உடையவ னே ! அயிற் படை-அணி வோனே !
பாழிகள் மான்மியம் மிகப்பொலிந் திலங்கும்
பழனியங் கிழித்தண்ட ப்ாணிஎம் பரனே !
ஏழிசை மறையொளி ஏற்றருள் புரிய
எம்பெரு மான் ! பள்ளி எழுந்தரு லாயே ! (1)

( வரம்பு இல் - எல்லையற்ற, அயிற்படை - வேலாயுதம். பாழி - நன் மான்மியம் - திருக்கோயிலின் நல்ல பெருமை. ஏழிசை மறையொலி - ஏழு சுரங்களான் அமைந்த தமிழ்த் தோத்திரங்களையும், நான்கு வேதங்களாலான வாழ்த்துக்களையும், உம்மைத்தொகை.)

கொங்கவிழ் கூதளம் கடம்பலர் அலங்கல்
கொற்றலை வேற்படை குலவுதின் புயமும்,
செங்கரத் திசை அணித் தண்டமும், தொடையில்
திகழ்திருக் கையுடன் சிலம்புகிண் கிணிசொல்
பங்கயப் பதங்களும் துலங்கிடும் கவின்ஆர்
பழனியங் கிரித்தண்ட பாணிஎம் பரனே !
எங்கண்முன் கண்டுமெய் இன்பம்எய் துறவே
எம்பெரு மான் ! பள்ளி எழுந்தரு ளாயே ! (2)

( கொங்கு அவிழ் - தேன் பிலிற்றுகின்ற. அலங்கல் - மாலைகளும் கொற்ற - வெற்றிமிக்க. வை - கூர்மையான. கொற்றவை ( சக்தி ) ஆகிய வேல் எனினும் ஆம். கரத்து இசை - கையில் பொருந்தியுள்ள. சால் - மேன்மை படைத்த .)

சேவலங் கொடிசெய செயஎன ஓதித்
திரகௌ மாரமெய்த் திருப்பெருந் தொண்டர்
ஆவல்கொண் உலர்மணிப் பணிசெழும் தேன்பால்
ஆட்டியும் சூட்டியும் அருள்பெற விழைந்தார் ;
பாவலர் புகழ்கிறப் பணிநிறைந் தோங்கும்
பழனியங் கிரித்தண்ட பாணிஎம் பரனே !
ஏவல்இட் டெந்தமை ஆண்டுகொண் டிடவே
எம்பெரு மான் ! பள்ளி எழுந்தருளாயே ! (3)

( தீர - தம்பத்தியில் உறுதிமிக்க, அவர் மணிப்பணி - மலர்களையும் இரத்தினாபரணங்களையும் சூட்டியும் என முடியும். தேன்பால் ஆட்டியும் அலர்பணி ஆட்டியும், எதிர்நிரணிறை. )

குணக்கிசை திசையினில் இரவியின் கதிர்கள்
குலவிய திருள்வலி குலைந்தென , எம்மை
உனக்கிடும் மும்மல வலிஒழித் தின்ப
உததியில் ஆழ்ந்திட உளம்கரு திடுவாய் !
மணக்கவின் சேடன்உச் சியின்மணி போலும்
பழனியங் கிரித்தண்ட பாணிஎம் பரனே !
இணக்கம்மிக் கெம்விழிக் கோர்மணி ஆகும்
எம்பெரு மான் ! பள்ளி ஷஎழுந்தரு ளாயே ! (4)

( குணக்கு இசை திசை - புகழ்பெற்ற கிழக்குத்திக்கு. உனக்கிடும் - வாட்டுகின்ற. மும்மலம் - ஆணவம், கன்மம், மாயை. உததி - கடல், மணக்கவின் சேடம் - பாம்புப்படந்தால் அழகுபெற்ற ஆதிசேஷனின். உச்சியின்மணி - தலையில் உள்ள மாணிக்கம். இணக்கம் - நட்பு )

புள்ளிசை எங்கனும் பரந்தன ; உடுக்கள்
பொலிவிழந் தகன்றன ; பொல்குவெண் சங்கம்
துள்ளிசை மங்களம் மிகஒலித்திட்ட ;
தோடக மணம்திசை தொறும்நிறைந் திட்ட ;
பள்ளிசை நிறையணிப் பழனங்கள் பொலியும்
பழனியங் கிரித்தண்ட பாணி எம் பரனே!
எள்ளிசை தயிலம்ஒத் தெங்கணும் நிறையும்
எம்பெரு மான் ! பள்ளி எழுந்தரு ளாயே ! (5)

( புள்இசை - பறவை ஒலி. உருக்கள் - விண்மீன்கள். தோடுஅக மணம் - மலரா இதழ்களுக்குள் இருந்த வாசனை. பழனங்கள் - வயல்கள். என் இசை தயிலம் ஒத்து - எள்ளினுள் எண்ணெய்போல் முழுவதுமாகப் பரவி )

உதயவெற் பின்திறம் போன்றெது நாளும்
ஒருகணப் போதொழி யாமல்இங் கடியேம்
இதயவெற் பூடிசைந் தோங்கறக் கருணை
இலங்கிடும் திருவருள் இசைலடி வோனே !
பதமலர் பெறும்திருத் தொண்டடி யவர்சூழ்
பழனியங் கிலித்தண்ட பாணிஎம் பரனே !
இதம்மிக எமைப்பணித் தெழுப்பிய அருட்சீர்
எம்பெரு மான் ! பள்ளி எழுந்தரு ளாயே ! (6)

( உதயவெற்பு - கிழக்கில் உள்ள உதயகிரி. இதய வெற்பூடு - உள்ளமாகிய மலையின்கண், உருவகம். இசை - பொருந்தியுள்ள இதம்மிக - நன்மைகள் மிகும்படி )

மதுமலர்ப் பொழில்மலி கிரிதொறும் ஞான
மணம்கமழ்ந் திருதிரு மேனிகொண் டென்றும்
புதுமைமிக் கமைஅருள் ஆடல்கள் இயற்றிப்
பூதலம் பாதலம் புரந்தருள் முதல்வா !
பதுமன்வந் தனை வழி பாடுகொண் டவிரும்
பழனியால் கிரித்தண்ட பாணிஎம் பரனே !
இதுதினம் எமக்கருள் முதுதினம் ஆக
எம்பெரு மான் ! பள்ளி எழுந்தரு ளாயே ! (7)

( மது - தேன் நிறைந்த, பூதலம் - நிலஉலகம். பதுமன் - பிரமன். முதுதினம் - பயன் முற்றிய நல்நாள். )

மருவரு கற்பகத் மெய்வகுஞ் சரியும்,
வள்ளியும் இன்புற மருவிய ஞான
குரு ! அருள் மேனிகொண் டன்பரை ஆளும்
குணக்கட லே ! திரு அருட்பெரும் குன்றே !
பருவதத் தொகைகளில் மிகைபடும் அணிசால்
பழனியங் கிரித்தண்ட பாணிஎம் பரனே !
இருமையும் பெறஎமக் களித்தருள் .புரிய
எம்பெரு மான் ! பள்ளி எழுந்தரு ளாயே ! (8)

( மருவரு . கற்பக - மணம்பரவுகின்ற கற்பக மரங்கள் நிறைந்த தேவலோகத்தைச் சேர்ந்த, மரு (வ) அரு கற்பு அக - மற்றவர்களால் கொள்ள இயலாத கற்பினை உடைய எனினும் ஆம். பருவதத் தொகை - மலைகள். இருமை - இம்மை, மறுமை )

“ சத்தியம் கைவிடு கிலன்உமை ” எனல்போல்
சத்திஅும் கையினில் தரித்தருள் ஞான
சித்திஇங் கலிவறப் புரிந்தெது நாளும்
திசை இசை மானிடர் திரள்களை எல்லாம்
பத்தியிற் பழக்கிஅங் கவர்மனம் கவரும்
பழனியங் கிரித்தண்ட பாணிஎம் பரனே !
எத்தியக் கங்களும் இன்றுடன் நீங்க
எம்பெரு மான் ! பள்ளி எழுந்தரு ளாயே ! (9)

( அடியார்களாகிய உங்களைச் சத்தியமாக விட்டுவிட மாட்டேன் என்று கூறுவது போலச்சத்தி ஆகிய ஆயுதத்தைத் தரித்துள்ளாராம். திசை இசை - எட்டுத்திக்குகளிலும் பொருந்தியுள்ள. எத்தியக் கங்களும் - எந்த வகையான மன மயக்கங்களும். )

வாகைமிக் கிசைதரும் கோழியங் கொடியும்
வரம்பில வாம்அண்ட வகைமுழு தடக்கும்
தோகையும் வாழிஎன் றேத்துகெள மாரத்
தொண்டர்கட் காம்பெருந் துணைப்புக லோனே !
பாகைஒத் தியல்மொழி மங்கையர் நடம்சால்
பழனியங் கிரித்தண்ட பாணிஎம் பரனே !
ஈகைமிக் கிசையும்நின் கைவளம் காட்ட
எம்பெரு மான் ! பள்ளி எழுந்தரு ளாயே ! (10)

( வாகை - வெற்றி. தோகை - மயில். புகலோனே - தஞ்சம் அளிப்பவரே. பாகை - சர்க்கரைப் பாகினை. கைவளம் - திருக்கரங்களின் வள்ளன்மை. )

முக்கனி ரசமும் அமிழ்தமும் கூட்டும்
முறையினும் மிகச்சுவை முதிர்தரும் இன்பம்
மிக்கவர் தரும்அரு ணாசல நாதன்
விளம்பிசைத் திருப்புகழ் வளம்படைத் தோங்கும்
பக்கம்முற் றியஒலி எல்கணும் முழங்கும்
பழனியங் கிரித்தண்ட பாணிஎம் பரனே!
இக்கரை இசைந்துநின் றக்கரை ஏற்றும்
எம்பெரு மான்! பள்ளி எழுந்தரு ளாயே! (11)

( முக்கனி - மா, பலா, வாழை. அருணாசலநாதன் - அருணகிரிநாதர். விளம்பு - திருவாய்மலர்ந்த. இசை - சங்கீதமயமான. பக்கம் - மலைச்சரிவு. இக்கரை அக்கரை என்றது பிறவிப்பெருங்கடலின் கரைகளை, ஒருபுறம் உலகம், மறுபுறம் வீடுபேறு. )

கடைப்படு பிறவிகள் அடைந்தள வற்ற
காலமும் வீணினில் கழித்திடும் எமக்குக்
கிடைப்படும் மானிடப் பிறவிதந் திடும்நின்
கிருபையைக் கருதிஉள் கிளர்ச்சிமிக் கெய்மப்
படைத்தநின் திருவருட் கேதுகைம் மாறே?
பழனியங் கிரித்தண்ட பாணிஎம் பரனே!
இடைப்படல் அற்றமெய் அன்பருக் கருள்வாய்!
எம்பெரு மான்! பள்ளி எழுந்தரு ளாயே! (12)

( கடைப்படு - இழிவான. கிருபை - கருணை. இடைப்படல் அற்ற - இடையீடு இல்லாமல், தொடர்ச்சியான. )

## 1. திருப்பழனிமலைப் பதிகம்

### காப்பு

### (வெண்பா )

13. தவமலிபேர் அன்படியார் சார்வாம் பழனிச்
சிவகிரிவாழ் கோயில் சிறக்கும் - துவர்வடிவத்
தண்டபா ணிக்கடவுன் தன்திதுப்பா ஓதஅவன்
புண்டரிகப் பொற்பதம்காப் பு.

*( துவர்வடிவ - பவளம் போன்ற செந்நிறமேனியன் ஆகிய. புண்டரிக - தாமரைபோன்ற. பொன் - அழகிய. )*

### நூல்

### ( எண்சீர் விருத்தம் )

14. நீறாடும் செம்பவளத் திருமேனிப் பொலிவும்,
நிறைகருணை வழிவிழுதோய் நிலவிசைமா முகமும்,
சாறாடும் வேலும், அணித் தண்டொடுதோ வணமும்,
தாள்மலரும் காட்டுகுகன் சாரும்இடம் வினவில்
ஆறாடும் சடையவன்கொள் பிரணவப்மெய்ப் பொருள்கேட்டு
ஆனந்தக் கண்ணீர்மெய் அலம்படியார் நீற்றுச்
சேறாடும் திருவீதி மங்களம்மிக் கிலகும்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பழனி மலையே. (1)

*( நீறுஆடும் - திருநீறு பூசப்பெற்ற. நிலவுஇசை - மதியைப் போன்ற. சாறு ஆடும் - விழாக்காணுகின்ற. ஆறுஆடும் - கங்கை தங்கிய. சிவனார்மனம் குளிர ஓர் எழுத்தில் ஆறெழுத்தை முருகப்பெருமான் உபதேசித்த வரலாற்றைக் கேட்டு வழியும் ஆனந்தக் கண்ணீரால் அடியவர்கள் பூசியுள்ள திருநீறு கரைந்து சேறாகும் வீதிகள். )*

15. கள்ளிசையும் கடம்பும், அணிக் கூதளமும், மணம்சால்
கலம்பகமும் சுலம்பும் அடல் வலம்பொலிமார் பிடத்தில்
வள்ளி தெய்வ குஞ்சரியின் புளகிதவான் கொங்கை
வாசம்ஊறும் நேசம்நிறை வானவன்ஊர் வினவில்
புள்ளிமயில் ஆடஇசைக் கோகிலம்பன் பாடப்
பூவையுடன் கிள்ளைகள்வான் புலவர்சுவர் பொழியத்
தெள்ளிமைசால் அருணகிரி திருப்புகழ்ப்பாட் டிசைசெய்
சிவகிரிஆ வினன் குடியாம் திருப்பழனி மலையே. (2)

(கள் இசையும் - தேன்பொருந்திய. கலம்பகமும் - கதம்பத்தொடரும். சுலம்பும் - ஊசலாடும். அடல்வலம் - போர் ஆற்றல். வானவன் - உயர்ந்தவன், கடவுள். இசைக்கோகிலம் - புகழ் பெற்ற குயில். குயில் பூவை கிள்ளைகள் பண்பாட் என இயையும். வான்புலவர் - மேல் உலகத் தேவர்கள். அலர் - மலர்கள். தெள்ளிமை - பொருள் தெளிவு, திருப்புகழ் மிக எளிமையானது என்பது கருத்தன்று; அதில் கூறப்பட்டுள்ள பொருள் சற்றும் ஐயத்திற்கிடமில்லாதது என்பதே உட்கோள்.)

16. கன்றல்இலாப் பெருந்தவத்தோர் இதயமது கரங்கள்
களித்தருந்தும் பேரின்பக் கள்மிகவும் பிலிற்றும்
குன்றலர்பங் கயல்மலர்ச்சே வடித்துணைதோய் குமர
குருபரன்உள் மகிழ்ந்தென்றும் குளவுபதி வினவில்
மன்றல்இசை செந்தமிழைச் சந்தனத்தை அன்பால்
வாரிஅலை வாரிஉண்டோன் வாசம்உறச் செலுத்தும்
தென்றல்இசை சோலைகள்நீர் பெய்துமுடி சாய்க்கும்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பானி மலையே. (3)

( கன்றல் - குறைதல். இதயமது கரங்கள் - மணமாகிய வண்டுகள். பிலிற்றும் - ததும்புகின்ற. குன்று அலர் - மலையில் மலர்கின்ற. மன்றல் - தமிழிற்கு மங்கலத்தன்மை, சந்தனத்திற்கு நறுமணம், இரட்டுற மொழிதல். வாரி - கைகளால் அள்ளி. அலை வாரி - திரைகளை உடைய கடல். உண்டோன் - அகத்தியன். வாசம் வசிப்பிடம், பொதியை.)

17. காரணகா ரியங்கள்எலாம் தான்ஆகி மாயக்
கண்ணுடையார் களும்ஞானக் கண்ணுடையர் ஆகிப்
பூரணவீட் டமைந்துவக்கும் படிஅருட்பே ராடல்
புரிதருசெங் கடப்பமலர்த் தெரியலன்ஊர் வினவில்
நாராமைஆ ரூரருடன் பரியின்மிசைக் கயிலை
ஞானஉலா அரங்கேற்றப் போனஉலா மகிமைச்
சேரர்பிரான் திருப்பணியின் விருப்பணிஆர் காட்சிச்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பழனி மலையே (4)

( தெரியலன் - மாலையை அணிந்தவன். நார்அமை - அன்புடைய. பரியின் மிசை - குதிரையின் மேல். சேரர்பிரான் - சேரமான் பெருமாள். விருப்பு அணிஆர் - விரும்பத்தக்க அழகுபொருந்திய )

18. கலையன் அலை வரநதிச்செஞ் சடைஉடையான் , கலையன்
காதல்பொலி அருணகிரி நாதன், விதி குளிர்ந்துள்
நிலைபெறஓங் காரஅநு பூதிநலம் அளித்த
நீதகந்த நாதன்என்றும் நிலவுதலம் வினவில்
அலைஉலவும் வாவியினில் காவினில்அங் கசவேள்
அணிச்சேனை, நாணிஇசை, ஐம்பாணம், அடல்ஆர்
சிலை, இரதம், கொடி, குடை, வாள், காகனம், ஊர் தியும்தோய்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பழனி மலையே. (5)

(கலையன் - பிறையையும். வரநதி - கங்கையையும். உடையான் - பெற்றுள்ள சிவபிரான். கலையன் - கலசன், அகத்தியர். விதி - பிரமன். நீத - நெறியினை உடைய. வாவி -குளம். கா - பூங்கா. அங்கவேள் அணிச்சேனை - மன்மதனின் படை, மகளிர். நாணி இசை - அவன்வில் நாணாகிய வண்டுகளின் ரீங்காரம். ஐம்பாணம் - ஐந்துமலர் அம்புகள். அடல்ஆர்சிலை - வலியவில், கரும்பு. இரதம் - தென்றல். கொடி - மீன். குடை - சந்திரன். வாள் - தாழம்பூ. காகளம் - சின்னம், குயில். ஊர்தி - வாகனம், கிளி. பழனியின் சோலைகளிலும் நீர்நிலைகளிலும் காமனின் சிறப்புக்குரிய பொருள்கள் எல்லாம் உள்ளன என்றவாறு.)

19. செங்களத்தில் இகலிஅமர் புரிசூர பதுமன்
சிந்தை, அழல் சேர்மெழுகில் செய்அருளின் திரம்ஆர்
மங்களம்மிக் கமைவிசுவ ரூபநலம் காட்டும்
வானவன், எப் பொருள்களும்தான் ஆனவன்ஊர் வினவில்
கொங்களவும் தொங்கல்அணிக் குழல்மடவார் உவந்து
குடைந்தாடக் கலங்குநதிக் குளிர்புனல்சேர் வயலில்
செங்களபம் உழக்குபகட் டினத்தின்உடல் கமழும்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பழனி மலையே. (6)

( செங்களம் - போர்க்களம். இகலி - பகைத்து. அமர் - போர் . அழல் - தீ. திரம் - உறுதி. வானவன் - கடவுள். கொங்கு அளவும் தொங்கல் - தேன் நிறைந்த பூமாலை. குழல் - கூந்தல். ஆட - நீராட. குளிர்புனல் - தண்ணீர். செங்களபம் - மகளிர் அணிந்திருந்த நல்ல வாசனைச் சாந்து. உழக்கு - கலக்குகின்ற. பகட்டு இனத்தின் - ஆண் எருமைகளின் .)

20. பித்திசையும் பொய்மாயக் கலைபயின்று சமயம்
பிணக்கில்விழா தியற்கை இன்பபெருக்கமைமெய் ஞான
மத்திநிலை காட்டிஅருட் கவுமாரர் போற்றும்
வண்ணம்இசை பேரருள்மெய்க் கண்ணவன்ஊர் வின்வில்
பத்திஅகம் போல்புறத்தும் பத்திபத்தி யாகிப்
பாவையர்வான் மேவையர்மெய்ச் சேவையர்கள் ஆகிச்
சித்தியற்சி தேந்திரியம் ஏந்தி வலம் புரியும்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பழனி மலையே. (7)

( பித்து - மயக்கம். கலை - கல்வி. மத்திநிலை - நடுநிலைமை. மெய்க்கண்ணவன் - சத்தியத்தில் நிலைத்துள்ளவன். பத்தி பத்தி - வரிசை வரிசையாக. வான்மேவு ஐயர் - வானுலகத்தேவர்கள். மெய்ச்சேவையர் - உண்மைத் தொண்டர்கள். சித்துஇயல - அருட்சித்தாடலின் இயல்பையும். சிதேந்திரியம் - ஐம்புலன்களையும் வென்ற தன்மையும்.)

21. பாவலரும் நாவலரும் புவிப்பிறப்பால் அடையும்
பயன்இதுவே எனத்துணிந்து பாடிமகிழ்ந் தாடிப்
பூவலரும் பாதநிழல் கூடஅருள் புரியும்
பூரணன்மெய்ஞ் ஞானசத்திக் காரணன்ஊர் வினவில்,

"அவல்ஆடி யார்கள் எல்லாம் வம்மின் என்பால் விரைந்" தென்று
அறைகூவிப் போன்பத் துறைகூட்டும் நாதச்
சேவல்அம ராவதிவாழ் தேவர்கெள உணர்த்தும்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பழனி மலையே. (8)

( பூ அலரும் - தாமரை போன்ற . என்பால் - விரைந்து வம்மின். நாத - ஒலிமிக்க. அமராவதி - வானுலகத்தலைநகர்.)

22. வான்மாதங் கத்தவமெய் மங்கைமனம் வாட
வனவேடர் தருமகளாம் வள்ளியைச் சேர்ந்தளிக்கும்
தேன்மாஉண் டிசைகுறிஞ்சிக் கிழவன்எனல் வாய்மைச்
சிறப்பமையப் புரிகருணைச் செய்வேன் ஊர் வினவில்
வான்மாரி யுடன் இமையோர் மகிழ்ந்துபெய்பூ மாரி
மதன்பகடூர் பொழிற்கண்இசை மதுகரம்ஆர் மலர்மெய்
தேன்மாரி ஆறனைத்தும் ஆறனைத்தாப் புரிசீர்ச்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பழனி மலையே. (9)

வான் - வானுலக. மாதங்க - யானை, மா - தினைமாவு. வான்மாரி - மழை. மதன்பகடு ஊர் - மாரனின் யானை, இருள் கவிந்த. ஆறு அனைத்தம் - எல்லாவழிகளையும். ஆறு அனைத்தா - நதிகளைப் போல.)

23. குரணவும் குரவுடன்கூ தளம்கடம்பும் அணியும்
குங்குமவெற் புறழ்புயத்தில் கொடிஏந்தி உவப்பில்
கரவணவார் நெஞ்சகம்நேர் மலைச்சிகரம் தோறும்
காட்டுமுரு கப்பெருமான் ஆட்டுநகர் வினவில்
சரவணவா லியில்பரா சரன்புதல்வர்க் கருளும்
தகையினில்எம் மையும் காக்கத் தகும் எனநின் போதச்
சிரவணம்கேட் டானந்திக் கும்தவம்ஆர் பொய்கைச்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பழனி மலையே. (10)

(குரவுஅணவும் - மணம்மிக்க. உறழ் - போன்ற. கொடிஏந்தி என்னும் வினையெச்சம் ஆட்டு என்னும் பெயரச்சத்தைக் கொண்டு முடிந்தது. கரவு அணவார் - வஞ்சகம் பொருந்தாத. பராசரன் புதல்வர் அறுவர் சாபத்தால் மீன் ஆகி முருகன் அருளால் சாபநீக்கம் பெற்றதாக ஒரு வரலாறு உண்டு. போதச்சிரவணம் - ஞான உபதேசம்.)

24. கார்இனத்தைத் தளைசெய்திகள் றமர்புரிஇந் திரன்றன்
கனமுடிமேல் வளைஎறிந்து கடல்சுவறும் படிமுன்
கூர் இலைவேல் விடுத்திடும்உக் கிரற்கனமஓர் கலைதான்
கொடுத்தபரி பூரணன் ஆம் குமரன் இடம் வினவில்
பாரில்விழாக் கதிபெறலாம் இகபரம்தோய் நலங்கள்
பலவும்உற லாம்மனிதப் படிவமைபாக் கியத்தீர்!
தேரின்விழாத் தேர்மின்! எனக் காவடியார்த் திரட்டும்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பழனி மலையே. (11)

( கார்இனத்தை - மேகங்களை. தளைசெய்து - சிறையிட்டு. இகன்று - பகைத்து. அமர் - போர். கன - பெருமைமிக்க. வளை - சக்கரம். இலை - இலையின் வடிவமைந்த உக்கிர குமார பாண்டியன் வரலாறு திருவிளையாடற் புராணத்தில். கலை - அம்சம். பாரில் விழா - நிலஉலகில் விழாத. பிறக்காத . காவடியார் - காவடி எடுப்போர்களை.)

25. கூர்த்தஅயில் அயிராணி துன்பிசைகண் ணீரில்
குளித்தவிழி பேர்இன்பில் களித்துறக்குஞ் சரிதோய்
சீர்த்தமண மண்டபத்தில் அருந்த இருந் தளித்த
இன்மயன்எல் லாம்ஆன தன்மயன்ஊர் வினவில்
ஆர்த்தமலம் ஆன் ‘ம’ வ்வும் மாலைஎனும் ‘ ந’ வ்வும்
ஆருயிராம் ‘ய’ வ்வும்என் றும் ஆற்றுதுயர் மாற்றித்
தீர்த்தருள்கா ரணநாமம் சொந்தம்உற முன்சார்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பழனி மலையே. (12)

( அயில் - வேல்போன்ற. அயிராணி - இந்திராணி. குளித்தவிழி களித்து உறஇருந்து அளித்த என இயையும். சீர்த்த - சிறப்புமிக்க. அருந்த - ( குஞ்சரி நலத்தைத்) துய்க்க. இருந்து அளித்த - அமர்ந்தருளிய. சின்மயன் - ஞானவடிவினன். ஆர்த்த - உயிரைக்கட்டிய.

திருவைந்தெழுத்தின் பொருளை விரிந்த சைவ சாத்திர நூல்களில் காண்க. காரண நாமம் - சிவ. சிவகிரி என்னும் பெயரை நினைத்து கூறியது.)

26. மையிடம்சேர் மின்னினை, வில் லினைநிகர்க்கும் மாய
வாழ்வை நம்பி உழலாதான் மாக்களைமுத் தினனும்
மெய்யிடம்சேர்த் திடும்விருதி னோடு,தண்டும், ஞான
வேலும்அணிந் தருள்குமரன் விரும்பும்இடம் வினவில்
பொய்யிடம்சார் ஐம்புலன்கொள் சுகப்போகி, மயக்கம்
போகிஎன் றும் மெய்யருட்சீர்த் தாகிஎன் றும் தவமே
செய்யிடம்என் றாண்டிசைநன் செய்இடம்ஆர் காட்சிச்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பழனி மலையே. (13)

( மைஇடம் - மேகத்தின் கண். வில் - வானவில். உழலாது. போகி - இந்திரன், போகுதலைப்பெற்றவன், தாகி - ஆவல் உள்வன். செய் இடம் - புரியும் இடம். நன்செய் இடம் - வயலாகிய இடம்.)

27. கும்பமுனி கலைகொள்இரா மானந்த ஞான
குருவாகித் தன்னதருட் கோகனத் திருத்தாள்
நம்படிமை யாம்கந்த சாமிஅருள் எய்த
நல்குதண்ட பாணிஇன்பம் மல்குநகர் வினவில்
கொம்பனைய கற்புமட மங்கையர்கள் அன்பில்
கொண்கர்அகம் மெய்யின்பம் உண்கஉண்கண் நோக்கில்
செம்பவளப் பெட்டகத்தில் முத்தமைதல் காட்டும்
சிவகிரிஆ வினன்குடியாம் திருப்பழனி மலையே. (14)

( கும்பமுனி - அகத்தியர். கோகனகம் - தாமரை. கொண்கர் அகம் மெய் இன்பம் உண்க - கணவன்மார்களின் உள்ளத்தாலும் உடலாலும் இன்பம் துய்க்க வேண்டி. கண் நோக்கில் - காதற் குறிப்பமைந்த பார்வையாலும். செம்பவளப் பெட்டகத்தில் முத்து அமைதல் காட்டும் - சிவந்த பவளம் போன்ற வாயின் முத்து போன்ற பற்களைச் சிறிதே காட்டும், புன்முறுவலாலும்.

அகப்பொருளில் இடம்பெறும் குறிப்பறிதல், வறிது நகை தோற்றல் என்னும் இரண்டு துறைப் பொருள்கள் இங்கு கூறப் பெற்றுள்ளன. களவில் இயற்கைப்புணர்ச்சிக்குரிய இத்துறைகளைக் கற்பில் கூறியதால் கணவன் மனைவியர் தலை நாளன்ன இன்பத்தில் என்றும் வாழ்ந்தனர் என்ற சிறப்பு பெறப்படுகிறது.)

## 3. பழனிக் குருமணிப் பதிகம்

**காப்பு**

**( வெண்பா )**

28. கலைப்பழக்கம் தோய்அடியார் கண்டுபணித் தேத்தும்
மலைப்பழனிக் கோயில் அமை வள்ளல் - இலைப்பழக்க
வேல்உடையான் தோத்திரப்பா விள்ளமுகம் யானை
போல் உடையான் சேவடிகாப் பு.

( கலைப்பழக்கம் - அறிவு. அலைப்பழக்கம் - இலையின் வடிவு. விள்ள - சொல்ல )

**நூல்**

**( எண்சீர் விருத்தம் )**

29. அணிஇசைபூ ரணகிரண அமுதமதி முகமும்
அருள்விழியும், இளநகைசற் றரும்புகனி வாயும்,
பணி இசைவெண் பொடிப்பவளா சலம்அனைய வடிவும்
பரிமளச்செங் கடம்பணிவேற் படைத்தோளும், ஒலிக்கின்
கிணிஇசையும் திருவடியும், தண்டுடனே இடையில்
கிளர்கரமும் துலங்கஉளக் கிருபைமிகுந் தென்கண்
மணிஇசையும் காட்சிஅக லாதருள வேண்டும்
மலைப்பழனித் தலைக்கோயில் வய்ங்குகுரு மணியே !. (!)

( அணிஇசை - அழகு பொருந்திய. பணி - அணிகலன்கள். பவள அசலம் - பவளமாலை. பரிமள - நறுமணம்மிக்க. கிண்கிணி - சலங்கை. கிளர் - விளங்குகின்ற. கண்மணி இசையும் - கண்ணின் பாவையில் பொருந்தும், காட்சியளிக்கும்.)

30. “ விந்தைகொள்பேர் அருள்ஆடல் புரிந்துகலி யுகத்தின்
மெய்த்தெய்வம் என்றுலகோர் வேண்டுதிரு அருட்சீர்த்
தந்தையுளான், நமக்கொர்குறை உண்டுகொலோ ?” என்னச்
சரண்புகுந்த அடிமைஎனைச் சகசால வழக்கில்
சிந்தைமெலிந் துழன்றிடநீ விடுத்திடுவாய் எனில்ஓர்
திக்குளதோ? என்மனம்உன் திருவுளம்தேர் கிலதோ?
மந்தைமணி தரில் என்னைப் பிரித்தாள்வாய் ! அபயம் ;
மலைப்பழனித் தலைக்கோயில் வயங்குகுரு மணியே ! (2)

( தந்தை - தகப்பனார் அனைய முருகவேள் . என்ன - என்று கருதி. சகசால வழக்கு - உலகியலின் மாயங்கள் நிறைந்த நடைமுறைகள். மந்தை மனிதரில் - தனக்கென்ற தனிக்குறிக்கோளோ கொள்கையோ இன்றி ஆட்டுக்குழந்தையை போலத் தேடிச் சோறு நிதம் தின்று சின்னக் கதைகள் பேசித்திரியும் பாமர மக்களிடத்திலிருந்து. அபயம் - சரண்)

31. கரங்காட்டி, மெய்கொள்மனோ கரமகாட்டி, மாயக்
காதல்இடும் மாதர்மனம் களிப்பமைய நெஞ்சக்
குரங்காட்டி விழி குறிப்பார் ஏவல்புரந் துற்ற
கூலிஇருட் போலிமருட் கூத்தில்நொந்தேற் குண்மைத்
திரம்காட்டிக் கும்பமுனி அருணகிரி நாதன்
சிந்தையில்தோய் அருள்ஞான தீபம்இட்டுன் பதம்சார்
வரம்காட்டி ஆட்கொளமுன் வந்தருள வேண்டும்
மலைப்பழனித் தலைக்கோயில் வயங்குகுரு மணியே ! (3)

( கரங்கு ஆட்டி - பம்பரம் போல் சுழல வைத்து. எதுகை நோக்கிய போலி ற ர. மனோகரம் - கவர்ச்சி. நெஞ்சக்குரங்கு - உருவகம் கூலி இருள் போலி மருட் கூத்தில் - பெறும் பணத்திற்காக இருட்டில் பொய்யாக அன்புடையவர் போல் நடிக்கும் நாடகத்தால் )

32. மண்அமையும் கந்தம்அறல் வயின்இலை; மற் றதில்ஆம்
மா தூரியம் அக்கினியின் மாட்டிலை ; அங் கதனின்
கண்அமையும் உருவம்வளி யிடைஇலை; இங் கிதன்பால்
கண்அசைவா காயமிசை காணில்இலை ; அதுபோல்
விண்அமையும் உன்அருளின் திருவுருவம் ஊன் ஆர்
விழிஉடையார் காண்பதுவோ ? மெஞ்ஞானம் ஆன
பெண்அமையும் கண்அமைய எனக்கருள வேண்டும்
மலைப்பழனித் தலைக்கோயில் வயங்குகுரு மணியே ! (4)

( கந்தம் - வாசனை. அறல் - நீர். மா தூரியம் - இனிமை. வளி - காற்று. காணில் - ஆராய்தால். விண்அமையும் - ஆகாயத்தைப் போன்ற, கண்ணிற்குத் தெரியாமல் இருந்தாலும் எல்லாவற்றிற்கும் ஆதாரமான இடமாக இருப்பதைப்போல என உவமை. வன் - தெளிவு. )

33. கலியுகம்தான் தருமம் அற்ற கடையுகம்என் பார்உன்
கடற்கருணைப் பெருக்கைஉளம் காணார் ; கண் டிடும்கண்
பொலியுகந்த தொண்டர்கட்குத் திருவருட்பே ராடல்
பொங்குகமாம் ; தீமைமுற்றும் மங்குகமாம் ; இன்பம்
பலியுகமாம் ; நாத்திகர்கள் மெலியுகமாம் ; கண்ணில்
பார்த்தவர்கள் மனத்தை முற்றும் ஈர்த்தியற்பூ ரணம்தோய்
வலியுகமாம் ; உன் சமுக மகிமை எவர் தெரிவார் ?
மலைப்பழனித் தலைக்கோயில் வயங்குகுரு மணியே ! (5)

( கண்பொலி - விழிகளின் கருணைச் சிறப்பை, பொலி முதனிலைத் தொழிற்பெயர். பொங்கு உகம்ஆம். உகம் - யுகம். சமுக மகிமை - சந்நிதியின் சிறப்பு. வினா எதிர்மறை. )

34. அண்டமய மாய்இசைசஞ் சிதவடிவும், அதில்பிண் -
டாண்டமதா கியஆகா மியவடிவும், அதனுள்
பிண்டமயம் ஆனபிரா ரத்தஉடற் பண்பும்
பரித்துணர்த்தி அகம்புறத்தும் பிரியாப்பேர் அருளார்;
தண்டுஅயிலார் தொடைஅமைத்த திருக்கைகளும், பவளா -
சலவடிவில் பொடிப்பூச்சும் தழைகரத்தாள் ஊன்றி
மண்டலமும் விண்தலமும் பாதலமும் போற்ற
மலைப்பழனித் தலைக்கோயில் வயங்குகுரு மணியே ! (6)

( அண்டமயமாய் - அளவோ, இருக்கும் இடமோ தெரியாமல் ஆகாயம் போன்றதாகிய. இசை - பொருந்துகின்ற. சஞ்சித வடிவும் - ஓர் உயிர் மொத்தமாக சேமித்து வைத்துள்ள நல்வினை தீவினைகளின் பண்பையும், அதில் பிண்ட அண்டம் அது ஆகிய - அதனோடு கருப்பத்தில் உள்ள முட்டை போல வளர்ந்து சேர்வதற்குரியதாகிய. ஆகாயமிய வடிவும் - ஓர் உயிர் இப்பிறவியில் ஈட்டிக் கொண்டுள்ள இருவினைகளும். பிண்டமயம் ஆன - மாமிசமயமான, அன்னமய கோசம் எனினும் ஆம். பிராரர்த்த - போன்றதாகிய. இந்த பிறவியில் துய்த்தே தீர வேண்டியதற்காக அமைந்த இருவினைகளின் காரணமாக வந்துள்ள. அயில்- எழில். பவ அசலம் - பவள மலை. பொடி - திருநீறு. மண்கலம் - நில உலகம்.)

35. குணப்பொருத்தம் சற்றறியார் வல்வினைமெய்ப் போகம்
கூட்ட உண்டாங் காரம்மிகக் கொடுத்து மருள் பழுத்த
நிணப் பொருத்தம் பெற்றஉடல் அலங்கரித்தெப் போதும்
நிலைபெறும்பே றுடையம்எனும் நினைவின் வழிச் சுழலும்
கணப்பொருத்தம் பெற்றலைவேற் குன்னருள்மெய் ஞானக்
கண்அளித்துக் கூதளம்சொல் கடம்பலர்மிக் கிசையும்
மணப்பொருத்தம் பெற்றதிரு வடிமலர்தந் தாள்வாய்!
மலைப்பழனித் தலைக்கோயில் வயங்குகுரு மணியே! (7)

( குணப்பொருத்தம் சற்று அறியார் - தத்துவங்களின் சேர்க்கை பற்றி ஒன்றும் அறியாதவர்கள் ஆகி. வல்வினை மெய்ப்போகம் கூட்ட உண்டு - வலிமைமிக்க இருவினைகள் உடலால் துய்க்கப் பெறும் இன்ப துன்பங்களை உண்டாக்க அவற்றை அநுபவித்து. ஆங்காரம்- அகந்தை. மருள் பழுத்த - மயக்கத்தை மிகுவிக்கின்ற. நிணப் பொருத்தம் பெற்ற உடல் - கொழுப்பு முதலிய ஏழு தாதுக்களால் அமைந்த உடம்பை. பேறு உடையம் - பெற்றியைப் பெற்றவர்யாம். கணப்பொருத்தம் - மனித கூட்டத்தின் நட்பு. அலைவேற்கு . அலர் மிக்கு இசையும் மணப்பொருத்தம் - மலர்கள் அதிகமாகச் சேர்வதால் தோன்றும் நறுமணத்தின் தொடர்பு.)

36. சத்துருவாய் உற்றஉடல் அசத்துவாக் கருதித்
தரையொடுவி ணினும்இசைபா தலத்தும்உள போகம்
மித்துருவாய் அளித்துவந்தேன் என்னைஅது நரகில்
வித்துருவாய் அமைத்தல்கண்டுன் விரைமலர்த்தாள் அடைந்தேன் ;
சித்துருவாய் ஆனந்த மயமாகி விளங்கும்
திருவருட்சா கரமே ! நீ சிறிதிரங்கி என்னை
மத்துருவாய் உழக்கும்இருள் மலவலிமாற் றிடுவாய்
மலைப்பழனித் தலைக்கோயில் வயங்குகுரு மணியே ! (8)

(சத்துரு - பகைவன். அசத்துரு - பகைமை அற்றவன். போகம் - துய்க்கப் பெறுவன. அளித்து வந்தேன் என்னை - கொடுத்து வந்தவனாகிய அடியேனை, வினையாலனையும் பெயர். அது - அந்த உடல். வித்து உருவாய் - விதையாக. விதை மலர்த்தால் - நறுமணமிக்க தாமரை போன்ற திருவடிகளை. சித்து உருவாய் - ஞானத்தின் வடிவமாக. சாகரம் - கடல். மத்து உருவாய் - உழக்கும் இருள் மலவலி - தயிரை மத்து கடைவதைப் போல உயிரை அலைக்கழிக்கும் ஆணவமலத்தின் வலிமையை.)

37. முடியாதோ எனைத்தொடரும் மாயையோடு கன்மம் ?
மூலமலம் எனவிழுங்கி மூடும் இந்த காரம்
விடியாதோ ? பரநாத ஒலி எனது செவிகள்
வினவாதோ? ஆனந்த வேலையிடை உள்ளம்
படியாதோ ? மடியாதாம் திருவரள்ஆர் அமுதம்
பருகாதோ ? என்நாநிற் பாடிஇன்பில் கண்ணீர்
வடியாதோ ? உண்மைதிரு வாய் மலர வேண்டும் ;
மலைப்பழனித் தலைக்கோயில் வயங்குகுரு மணியே ! (9)

(முடியாதோ - தீராதோ. அந்தகாரம் - இருள். வினவாதோ - கேட்காதோ. ஆனந்த வேலையிடை - மகிழ்ச்சிக்கடலில். மடியாது ஆம் - அழியாமல் வளர்கின்ற.)

இயற்றும்மயிற் பரிமிசைநின் இன்ப அருட் காட்சி
மாந்தவிழி முன்ஒருக்கால் வழங்கிடுதல் வேண்டும்;
மலைப்பழனித் தலைக்கோயில் வயங்குகுரு மணியே ! (11)

( ஏந்து அலைநீர் உண்டு எழும் - சூற்கந்தரம்நேர் - சூலுண்ட மேகத்தைப் போன்ற. காட்சி மாந்த - தரிசனத்தைத் துய்க்க .)

40. முழுத்தயைதோய் விழுத்துணைவன் நீஎனஉள் கருதி,
முற்றும்உனை நம்பும்என்மேல் முதிர்கருணை பொங்கிப்
பழுத்த தமிழ்ப் பாவலரும் நாவலரும் மெச்சும்
பண்பமையும் புலமையொடுன் பாதமிசை நீங்கா
அழுத்தம்மிக்க பெரும்காதற் கடல்அளித்தெங் கணும்சென்று
ஆடுசித்தி வல்லபமும் அருளிஅன்போ டாள்வாய் ;
வழுத்தருணைக் கிளிப்புதல்வன் திருப்புகழ்ப்பா மணக்கும்
மலைப்பழனித் தலைக்கோயில் வயங்குகுரு மணியே ! (12)

( முழுத்தயை - பூரணமான கிருபை. விழுத்துணைவன் - சிறந்த புகலிடம். வழுத்து - கீர்த்தியைப் பாடுகின்ற. அருணைக் கிளிப்புலவன் - அருணகிரி நாதரின் .)

41. திருப்புகழ்த்தே சிகன், முருக தாசன், அணிச்சீலம்
திருந்துண்ட பாணிஎனும் திருப்பெயர்ஏற் றவிரும்
குருப்புலவன் மரபிசைரா மானந்த நாமக்
கோலமுடன் வந்தருள்மெய்ச் சீலம்அளித் துளத்தில்
மருப்புதுமா மலர்க்கழல்கள் அமைத்தனிதில் ஆண்டு,
மலைப்பழனித் தலைக்கோயில் வயங்குகுரு மணியை
விருப்புடனே அடிமைகந்த சாமிதுதித் தணிபா
விளம்படியார் வேட்கையைச்செவ் வேள் அருள்வான் ;
நிசமே (13)

( மருபுதுமா மலர்க்கழல்கள் - நறுமணம் மிக்கதும், அன்றலர்ந்தும் திருமகளுக்கு உறைவிடம் ஆனதுமாகிய தாமரை போடனற திருவடிகளை. அணிபா - சுற்றுகின்ற பாடல்களை, வினைத்தொகை.)

## 4. திருப்பழனிப் பதிகவந்தாதி.

காப்பு

( வெண்பா)

42. *கழனிச் சிறப்பமைந்து காமர்பொங்கு மேன்மைப்*
*பழனிச் சிவகிரியின் பால்மெய்த் - துழனிப்*
*பரநாதப் பாத தண்ட பாணித்துதிக் காப்பைங்*
*கரகநாதன் தாட்பங் கயம்.*

*( கானி - வயல். காமர் - அழகு. துழனி - ஒலி. துதிக் காப்பு - ஐங்கரநாதன் தாள் பங்கயம்.)*

நூல்

( எண்சீர் விருத்தம் )

43. *புரணமதி நிகர்முகமும், கருணை மாரி*
*பொழிவிழியும், குறுமுறுவல் பொலிசெவ் வாயும்,*
*கிரணம்உமிழ் திருமேனிச் சிறப்பும், செஞ்சொல்*
*கிளி, கொடி, வேல் அணிபுயமும், கிரிதோ றாடும்*
*சரணமலர் களும், வாமத் தமைத்த கையும்,*
*தண்டுடன்கோ வணம்கீளும் தழைய என்முன்*
*அரணம்உற வந்தருள்வாய் பழனி வெற்பில்*
*அமலசிவ யோகர்தொழும் நிமல வேளே!* (1)

*(புரண - முழுமையான. கிரணம் - ஒளிக்கதிர். செஞ்சொல்கிளி - அருணகிரிநாதர். வாமத்து - இடது பக்கத்தில். தழைய - பொலிய. அரணம்உற - காவலாக அமையும்படி. அமல - குற்றமற்ற. நிமல - இயல்பாகவே மலங்களிலிருந்து நீங்கிய.)*

44. *வேள்ஆகும் உனக்கடிமை ஆக நாளும்*
*வேண்டும் எனைக் கரும்புவில்தோய் மென்பூ அம்போன்*
*ஆள்ஆகும் வண்ணம்விழி மறித்துத் தன்ஓர்*
*ஆணைசெலுத் திடவிடுத்தல் அழகோ ? ஏற்ற*
*நாள்ஆகும் இத்ததிநின் கடைக்கண் நோக்கி,*
*நாயேனை ஆண்டருள்வாய் நாதாந் தம்தோய்*
*தாள்ஆகும் புகல்;அடியார் நெஞ்சம் போலும்*
*தலைப்பழனி மலைத்தளிசால் சமர்வே லோனே.* (2)

( பீஅம்போன் - மலர்க்ணைகளை உடைய காமனது. ஆள் - அடிமை இத்ததி - இந்த தருணம். நாயேனை ஆண்டு தாள் ஆகும் புகல் அருள்வாய் என்பது முடிவு. நாதாந்தம் - நாத தத்துவத்தின் இறுதி, " நாதத் தத்துவத் தப்புறம் நண்ணும் நின் பாதம் பங்கய மேபரம் என்றுளேன் " என்பார் வண்ணச் சரபர். ( பழனித் திருவாயிரம், பதிற்றுப். 20 ), தலை - முதன்மை வாய்ந்த. தனி - திருக்கோவில். சமர் - போர் .)

45. வேல்ஏந்தி அணிப்பழனி வெற்பின் மீதில்
மெய்அடியார் விழிகுளிர வியன்ஞா னச்செங்
கோல்ஏந்தி நின்றஉன தடிக்கீழ் என்றும்
குடிஆகும் எனை உலகில் விடியா மாய
மால்ஏந்து தத்துவப்பேர்க் கள்வர் அந்தோ
வழிமறித்துள் உளம்கவர மயங்கு நின்றேன்
மேல்ஏந்தும் சிவஞான மயத்தில் கூட்டுன்
விழிக்கடைஎன் மேல்பதித்த வேண்டி னேனே. ( 3)

( வியன் - பெருமை மிக்க. விடியா - இருள் நீங்காததும். மால்ஏந்து - மயக்கத்தை வளர்க்கின்ற. தத்துவப்பேர்க்கள்வர் - புலன்களும் பொறிகளும் ஆகிய திருடர்கள். கூட்டுகின்ற விழிக்கடை, உன் விழிக்கடை எனத் தனித்தனி இயையும் )

46. வேண்டுவதுன் திருவடித்தா மரைமேல் சற்றும்
விலகாமெய் அன்பென்றே மேன்மேல் என்றும்
தூண்டுவதுன் திருவருளின் செயலே என்னத்
துணிந்துபணிந் திடுவேனுள் சோகம் எய்த
ஈண்டுவது நாயேன்முன் வினையோ ? நீதான்
இயற்றிடும்சோ தனைத்தொழிலோ என்றென் றெய்த்தேன்
சேன்துலங்கும் சிகரிஅணிப் பழனி வெற்பின்
திருக்கோயில் பெருவாழ்வாய்ச் சிறக்கும் கோவே ! (4)

( பணிந்திடுவேனுள் - வணங்குபவனாகிய அடியேனுக்குள். ஈண்டுவது - வந்து சேருதல். என்று என்று எய்த்தேன் - என எண்ணி எண்ணி வருந்துகிறேன். சேன் துலங்கம் - வானளாவிய. சிகிரி - கோபுரம், மலை உச்சி எனினும் ஆம். )

47. சிறப்பமையும் மாதவக்கெள மாரங்த தொண்டர்
சிந்தைவிழி களுக்கின்பம் தேக்கும் ஞான
நிறப்பவளத் திருமேனி தனையே நாடி
நெக்குருகிப் போற்றும்இன்ப நிலைஈந் தேபொய்ப்
பிறப்பமையா தாள்வதுன்றன் பாரம் ; நாயேன்
பிழைகுறித்து விடில்காப்பார் பிறர்உண் டேயோ?
திறப்படும்நெஞ் சினர்க்குறவாம் பழனி வெற்பில்
செங்கையில்வேற் படைஏந்தித் திகழும் தேவே! (5)

( சிந்தை விழிகளுக்கு , உம்மைத்தொகை. ஞானத்திருமேனி. பொய்ப்பிறப்பு - மாயையில் உழல வைக்கும் பிறப்பு, நிலையாமையை உடைய பிறவி எனினும் ஆம் )

48. தேவர்கள்சே னாபதிப்பேர் தாங்கி முன்நாள்
செழுங்கடல் மத்தியில்வீரம் சிறந்து நின்ற
மாவடுமெய்ஞ் ஞானவடி வேற்கை கொண்ட
வள்ளல் ! உன்தாள் துணைகருதென் மனத்தினூடே
பாவினைத் தடைஇடையே வந்து தன்ஓர்
பராக்கிரமம் காட்டிஅச்சப் படுத்த லாமோ ?
சேவல்அணித் துவசம்இசை சிகிரி விண்தோய்
சிவகிரிஆ லயத்திசையும் தேவர் கோவே ! (6)

( மா அடு - மாமர வடிவில் நின்ற சூரனைப் பிளந்த. பராக்கிரமம் - வலிமை. துவசம் - கொடி. இசை சிகிரி - பொருந்திய கோபுரம், வினைத்தொகை.)

49. கோவைஇசை கனிநேர்செவ் இதழ்ஆர் தெய்வ
குஞ்சரிவா டிடக்கான்தோய் கோப வேடப்
பாவைதனை இரந்தனைதல் போன்று நாயேன்
பாவைவிழைந் தணிதரில்என்? பழிஉண் டாமோ ?
சாவை, உதிப் பினைஅறியா அமல இன்பத்
தவப்பெரியோர் கண்அகத்தில் சார்ந்து நீங்காச்
சேவை, நர வடிவமைந்தார் பலரும் எய்தத்
திருப்பானி மலைமீதில் திகழும் வாழ்வே. (7)

( கோவை இசை கனி - கோவைக்கொடியில் பொருந்துகின்ற பழம். கான்தோய் - தினைப்புனத்தில் உள்ள. பாவை - பாடலை. உதிப்பினை - பிறவியை. கண்அகத்தில் - விழிகளிலும் உள்ளத்திலும், உம்மைத் தொகை. சேவை - தரிசனத்தை என ஐ உருபு விரிக்க )

50. வாழ்வாவ துன்புகழ்ச்சீர் பாடி நாடும்
வழிபாடே என்றகவு மாரர் செஞ்சொல்
சூழ்வாய்மை உணராது, புவிவான் மீதில்
சூறையிடைப் பட்டலைபுன் துரும்பே போலத்
தாழ்வாய மூவாசைப் பிணிப்பால், அந்தோ !
தட்டழிந்து, வாடிஉளம் தளர்ந்தேன் என்னை
ஊழ்வாதை தவிர்ந்தநிலை யூடு கூட்டாய்;
ஓங்குசில கிரிக்கோயில் உற்றுள் ளானே ! (8)

( சூறையிடைப்பட்டு - புயலில் சிக்கி. தாழ்வுஆய - இழிந்த. தட்டழிந்து - நிலைகெட்டு. ஊழ்வாதை - வினைகளால் நேரும் துன்பம். )

51. உற்றார்கள் ஆவார்என் உடலுக் கன்றி
உயிரினுக்கும் ஆவார்உய்த் துணவின் இல்லை;
பற்றாகம் பிரபஞ்சம் அளிக்கும் மாயைப்
பால்அருந்தி மயக்கம்மிகப் பதைப்புற் றெய்த்தேன்
உற்றாயத் தகுதுளையாய்ப் பழனி வெற்பில்
உறைவானே ! என்னைமுற்றும் உடையா னே! நின்
பொற்றாளே துணைஎனக்காட் டிடல்போல் சென்னி
புனைய அமைத்தாள்க ! புறம் போக்கிடேலே (9)

(பற்று ஆகும் - ஆசை மயமான, பிரபஞ்சம் - உலகம். உற்று ஆயத் தகும்.)

52. போக்குவர வற்றிசைபூ ரணமாய் எங்கும்
பொலிந்தும்உயர் திருப்பழனியில் பொருப்பில் அன்பர்
நோக்கும்வகை தண்டொடுவேல் அணிந்து நின்ற
நுண்ணியபுண் ணியவடிவாம் நோன்றா ளானே !
ஆக்குவதும் அழிப்பதுவும் தவிர்த்தெந் நாளும்
அகண்டமயம் ஆகிஇசை அநுபூ திச்சீர்
தேக்கும்வகை அடியேன்என் உணர்வில் கூடித்
திருத்திஇசைந் தின்மையச் செலுத்து வாயே. (10)

(போக்கு வரவு - இறப்பு பிறப்பு. நோன்தாளானே - வலிய திருவடிகளை உடையவரே, சரண் அடைந்தோர் எல்லோரையும் தாங்குவது வலிமை. தேக்கும் வகை - நிறையும் படி.)

53. வாய்கொண்டு துதித்திடுவார் தம்மை என்றும்
மனம் கொண்ட வாஞ்சை முற்ற வழங்கி நாளும்
தாய்கொண்ட பேரருளில் காக்கு மாறாண்
டலைக்கொடி கொண் டேபழனிச் சயிலக் கோயில்
வாய்கொண்ட குருமணியே1 கருணை ஞான
வாரிதியே! உன்புகலாம் வாய்மை யுற்ற
சேய்கொண்ட துன்பம்உன துளம்தே நாத
செய்கை கொலோ? சகிப்பரியேன்; செப்பி னேனே. (11)

(வாஞ்சை - ஆவல். ஆண்டலைக்கொடி - கோழிக்கொடி சயிலக்கோயில்வாய் - மலைக்கோவிலினிடத்து. வாரிதி - கடல். புகல்ஆம் - அடைக்கலம் ஆகிய. சேய் - குழந்தை போன்ற அடியேன்.)

54. சகிப்பரிய துன்படியார் எய்தில் ஒடித்
தவிர்த்தருளத் தகர், தவளத் தந்மித யோடு
சிகிப்பரியும் கொண்ட அருட் கடலே! நாயேன்
தியக்கம்மிகப் புரிகன்மச் சிலுகால், அந்தோ!
வகிப்பரிய துயர்ப்பாரம் தாங்கி எய்த்தேன்;
மாநிலமீ தினில் இறக்கி வைப்பார் இல்லை;
அகிப்பணியார் திருப்பழனி அப்பா! முற்றும்
அடிமையைநீக் காதுபுரந் தாள்வாய்; வாழி! (12)

(தகர் - ஆடு. தவளத்தந்தி - வெள்ளையானை. சிகிப்பரி - மயில்வாகனம். தியக்கம் - மனக்கலக்கம். கன்மச்சிலுகு - வினைகளால் தோன்றுகின்ற துன்பத்தால். வகிப்பரிய - சமக்க மாட்டாத. எய்த்தேன் - நொந்தேன். அகப்பணிஆர் - பாம்புகளாகிய ஆபரணத்தைப் பெற்ற பழனிமலை. அகி என்பதற்கு மேகம் எனினும் ஆம்.)

## 5. பழனித்தண்டபாணியன் மாலை

### காப்பு

### ( எழுசீர் விருத்தம் )

55. பார்பொலி உயிர்கள் இகபர போக
பாக்கியம் பெற்றுய அருளால்
சீர்பொலி விளையாட் டியற்றிடும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியன்மேல்
தார்பொலி கடம்பில் இனியபா மாலை
சாற்றிடக் கிம்புரிக் கோட்டுக்
கார்பொலி கருணை மதட்பொழி விகடக்
கணபதி பதமலர் துணையே.

( தார்பொலி - மாலையாகி எழிலூட்டுகின்ற. கடம்பில் இல் உவம உருபு. கிம்புரிச்கோட்டு - பூண் அணிந்த தந்தங்களை உடைய. கார்பொலி - மேகம் போல. பாமாலை சாற்றிட விகடக்கணபதி பதமலர் துணை என்பது முடிவு. ஏ - ஈற்றசை )

### நூல்

56. பருவமா மதிநேர் வதனமும், முறுவல்
பவளவா யுடன் அருள் விழியும்,
மருவணித் தண்டம் புனைகையும், இடைமேல்
வைத்தகைத் தலமும் ஆர் நீற்றுக்
குருவருட் கோலம் காட்டிஎன் முடியில்
குளிர்பதத் துணைமலர் சூட்டித்
திருவருள் புரிவாய்! அடைக்கலம்; பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! ( 1)

( மருவு அணித்தண்டம். ஆர்நீற்று - அணிந்த திருநீற்றினை உடைய )

57. மூவடி இடம்கேட் டுலகெலாம் அளந்த
முகுந்தநா யகன்மரு கா! நின்
சேவடிக் கடியேன் சிறுமனம் அடங்கச்
செய்வலி இல்லையோ செப்பாய்;
காவடி யார்கா வடிஅடி யாராய்க்
கவின்றிடக் கலந்தவ ருடன்வாழ்
தேவடி யார்தே வடியராம் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (2)

(கா அடியார் - கற்பக மரத்தின்கீழ் உள்ள தேவர்கள். காவடியாராய் - காவடி எடுக்கும் அன்பர்களாக கலந்து அவருடன் வாழ் தேவடியார் - தேவர்களோடு சேர்ந்து வாழும் அரம்பையர். தேவுஅடியர்ஆம் - இறைவனின் அடியார்களாக மாறுகின்ற.)

58. அமிழ்தினில் சுவைமிக் கன்பினர் உளத்தை
அனல்இசை மெழுகென உருக்கும்
தமிழ்கொடுன் மகிமைத் திருப்புகழ் களையே
சாற்றும்மா தவம்எனக் கருள்வாய்;
சிமிழ்நிகர் தனத்தார் உடல்கலம் பகமாம்
சேறுகொண் டுயிர்க்கருள் வாசம்
திமிர்தல்செய் கமலத் தடம்பொலி பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (3)

(சிமிழ் - செம்பு. உடல் கலம்பகம் ஆம் - மேனியில் பூசிய வாசனைக் கலவை ஆகிய. திமிர்தல்செய் - வளர்க்கின்ற. பழனியில் உள்ள தாமரைக் தடாகங்கள் பெண்கள் குளிக்கின்றதால் ஏற்படும் நறுமணத்தை உயிர்களில் படியும் அருள் மணமாக மாற்றுகிறது என்றது அருமையான கற்பனை.)

59. நாற்றிசைப் பதிவாழ் மாந்தர்,விண் ணோர்கள்
நாடிடுந் தோறவர் உளத்தில்
ஊற்றிசை பேர்அன் பளித்தவர் உள்ளம்
உருக்கும்நின் பேர்அருள் வடிவம்
போற்றிசை அடியார் விழிப்புனல் இன்பம்
பொலிஅபி டேகவான் பொருள்கள்
சேற்றிசை இரத வீதிஆர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (4)

( நால்திசைப்பதி - நான்கு திக்குகளிலும் உள்ள ஊர்களில். அபிடேக வான்பொருள்கள் - திருமுழுக்காட்டும் உயர்ந்த திரவியங்கள். சேற்று இசை - சேறாகப் பொருந்துகின்ற. ஆர் - பொருந்தியுள்ள.)

60. குத்திர வடிவம் பெறும்கிர வுஞ்சன்
கோலமு டுருவும்உன் ஞானப்
பத்திர வடிவேல் யான் துயர் படும்சீர்
பார்த்திருப் பதுமுறை தானோ ?
கைத்திரத் தோவர் செய்சிக ரியில்ஆம்
காமர்கண் டுவந்துவிண் ணவர்கள்
சித்திரத் துணையில் இசைதரும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (5)

( குத்திர - வஞ்சகமான மலையின். பத்திர - இலைவடிவுள்ள. சீர் என்ற சொல் இங்கு இகழ்ச்சிக் குறிப்பாகச் சிறுமையை உணர்த்துகிறது. கைதிறந்து - தொழில் வல்லமை மிக்க, நகரம் எதுகை நோக்கிய போலி. ஓவர் - சிற்பிகள். சிகரி - கோபுரம். காமர் - அழகு. சித்திரத் துணையில் - அசையாத ஒவியங்களைப் போல )

61. நரிஎரி காக்கை பருந்துறு விருந்து
நமக்கென நாடிடும் உடலை
உரியதென் றனக்கென் றலைகெடு மதியால்
உன்அடி போற்றிலேன் அந்தோ !
விரிகம லத்தண் பணையில்வண் டெண்ணில்
விழிபடைத் துன்திருக் கோலம்
தெரிசனம் செயல்ஒத் தவிர்புகழ்ப் பழனி
சிவகிரித் தண்டபா ணியனே ! (6)

( உரியது என்றனக்கு என்று அலை - தாமரையில் படியும் வண்டுகள் கண்களுக்கு உவமை. செயல் - செய்தல். ஒப்பு :- எரிஎனக் கென்னும்; புழுவோ எனக்கென்னும்; இந்த மண்ணும் சரி எனக் கென்னும்; பருந்தோ எனக்கென்னும்; தான்புசிக்க நரிஎனக் கென்னும்; புன்னாய் எனக்கென்னும்; இந்நுறுடலைப் பிரியமு டன்வளர்த் தேன்இத னால்என்ன பேறெனக்கே ?

- பட்டினத்தார்.

62. வேதன், அந் தகன்,வேள் புரிதுயர்க் குறும்நி-
வேதனம் ஆம்உடற் போகப்
பூதனம் தேடி உழன்றிட விடுத்தல்
போ தும் ; உன் பூம்பதம் தருவாய் ;
மாதனத் தெய்வப் பிடிக்குவான் இறைவன்
வழங்குமங் களவரி சையில்ஆம்
சீதனப் பழன நிரைபொலி பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (7)

( வேதன் - பிரமன். அந்தகன் - இயமன். வேள் - மன்மதன். நிவேதனம் - காணிக்கை. பூதனம் - வளர்தலைப்பெற்ற செல்வம், பூ முதனிலைத் தொழிற்பெயர். மா - அழகிய. தெய்வப்பிடி - தெய்வ யானையம்மை. வான் இறைவன் - இந்திரன். வரிசை - பரிசு. இந்திரன் முருக பெருமானுக்கு மாமனார் ஆதலின் மருதநிலத்தலைவனாகிய தனக்கு உரிய வயல்களைச் சீதனமாகக் கொடுத்தான் என்க. பழனநிரை - வயல் கூட்டங்கள். )

63. விடப்பணித் தகையில் தீண்டிஉள் மயக்கும்
வெம்புலப் பகைஅற, உன்செங்
கடப்பணி மணத்தாள் சிரமிசை சூட்டிக்
கரணம்முற் றுருக்கும்அன் பருள்வாய் ;
குடப்பணித் தனமங் கையர்விழி வலையில்
கோப்புணாச் சிதேந்தரி யச்சீர்த்
திடப்பணித் தவர்தாட் பொடிப்படிப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (8)

( விடப்பணித்தகையில் - நச்சுப்பாம்பகளைப்போல. அணிதாள் மணத்தாள் எனத்தனித்தனி இயையும். குடப்பணித்தன - குடத்தைப் போன்றதும் அணிகலன்களைப்பூண்டதுமாகிய நகில்களை உடைய . கோப்புஉணா - சிக்காத. சிதேந்திரியச்சீழ் - புலன்களை வென்றதாகிய பெருமை. திடப்பணித்தவர் - உறுதியான திருத்தொண்டினை உடைய தவசிகள். தாள்ப்பொடி - பாததூளி படிப்பழனி - படிக்கட்டுகளை உடைய பழனிமலை. )

64. உருக்கவின் படைத்திங் நிலம்எலாம் செங்கோல்
ஒச்சும்மன் னவர்கள்ஆ யினும்நின்
இருக்கவிர் முடித்தாள் முடித்திடாச் சென்னி -
யினர்கள்ஆம் எனில்கடை யவரே !
" தருக்கவி யாக ரணத்தமர்ப் புலவீர் !
தருக்கவி ஆகில்என் மிசைநும்
செருக்கவித் தின்பூந் தருள்வன் " என் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (9)

( இருக்கு அவிர்முடி - வேதத்தின் உச்சியில் விளங்குகின்ற. தருக்க - நியாய ( விவாதம் ) சாத்திரத்திலும். வியாகரணத்து - இலக்கணத்தும். அமர்ப்புலவீர் - போரின்ன உடைய அறிஞர்களே. என்மிசை - தருக்கவி ஆகில் - என்பால் மரத்தில் வசிக்கும் குரங்குகளாக ஆனால். செருக்கு அவித்து - அகந்தையைப் போக்கி. என் - என்று சொல்கின்றதைப் போல் உள்ள. )

65. கருவிகள் கரணம் கொண்டுனைப் பணியக்
கருதிலேன் கானகத் திரைதேர்
குருவிலல் விலங்கில் இழிந்து, பொன் ஈட்டிக்
குவித்தலே பயன்எனக் குமைந்தேன் ;
அருவிஆர் முடிதோய் முகில்அபி டேகம்
ஆனத்தீர்த் தம்கொடு பெய்து
திருஇகத் தவர்க்கீந் திடல்புரை பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (10)

( கருவிகள் - பொறிபுலன்கள். கரணம் - அந்தக்கரணம். இரைதேர் - உணவைத்தேடுகின்ற. இழிந்து - கீழ்நிலை அடைந்து. திருவை. இகத்தவர்க்கு - இவ்வுலக மக்களுக்கு, புரை - போலும். )

66. கண்டிகைக் கலனும் , வெண்திரு நீற்றுக்
கவசமும் புனைதவக் கவின்ஆர்
தொண்டிசை அன்பர் பொன்னடித் துகளே
தோய்க்கும்வீ டெனக்கொளா துழன்றேன் ;
வண்டிரை தன்தேன் நா றும்கான் ஆறு
மணம்கொடு கூடிஆர்ப் பரித்துத்
தெண்டிரை உவரை மாற்றணிப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (12)

( கண்டிகைக்கலன் - உருத்திராக்கம் ஆகிய ஆபரணம். வண்டு இரை - தேனீக்கள் ஒலிக்கின்ற. தண் - குளிர்ந்த. கான்ஆறு - காட்டாறு. தென்திரை - தெளிந்த அலைகளை உடைய கடலின், அடையெடுத்த ஆகுபெயர். உவரை - உவர்ப்பினை. மாற்று அணி. )

67. மருப்படி மலர்உன் மலர்பதத் திடும்சீர்
மதித்தலேன்; வயிற்றிரைக் காகத்
தெருப்படி தொறம்சென் றேகருங் காக்கைத்
திரள்எனக் கத்தியே திரிந்தேன் ;
கருப்படி உலகப் பவப்பெருங் கடலார்
கரைப்பெறக் காட்டருள் மகிமைத்
திருப்படி யினம்கொண் டவிர்புகழ்ப் பழனி
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 13)

( மருப்படி - மணம்கொண்ட. கருப்படி - காரணத்தால் உண்டாகின்ற. பவப்பெரும் கடலார் - பெரிய பிறவிக் கடலைப் பெற்றுள்ளவர்கள். திருப்படி இனம் - அழகிய ( அல்லது புனிதமான ) படிக்கட்டுக்களின் கூட்டம். )

68. விருப்புடன் வெறுப்பென் றிசைகுழி மேட்டில்
வீழ்த்தியும் ஏற்றியும் சுழலத்
திருப்புறு கன்மத் தியக்கற உண்மைச்
சிறப்பியற் புத்துணர் வருள்வாய் ;
தருப்புல வோர்கேட் டுவக்கவான் அணையும்
தருப்பொலி அஞ்சுகம் கனிவாய்த்
திருப்புகழ்ப் பாடம் தினம்புகல் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 14)

(விருப்பு வெறுப்பு - குழிமேடு நிரல்நிறை. ஆசைக்கும் வைராக்கியத்திற்கும் காரணமாவதால் இவ்வாறு கூறினார் தியக்கு அற. தருப்புலவோர் - கற்பக நாட்டுத் தேவர்கள். தருப்பொலி - மரங்களில் உள்ள. அஞ்சுகம் - கிளிகள். )

69. பார்த்தியக் கமைவேன் றன்னைநின் அருட்கண்
பார்த்தியற் குறுமுனிக் கருளும்
பூர்த்தியாம் பேர்இன் பம்கொள்ஞா னா று -
பூதிஎன் உளம்பெறப் புரிவாய் ;
கார்த்திகைத் திருநாள் சேவைகண் டேத்தும்
கண்ணியத் தொண்டருட் கருதும்
சீர்த்திகை வரச்செய் திடும்புகழ்ப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (15)

( பார்த்தியக்கு - உலக மயக்கம். இயல் - ( தமிழ் ) மொழியாற்றல் மிக்க. பூர்த்தி ஆம் - முழுமையான. தொண்டர் உள் கருதும் சீர்த்தி. )

70. ஊண்அகத் தவிரும் பூண்அகத் தாசை
உறும்மட மாதர்தம் ஏவல்
பேண்அகத் திச்சை உற்றயான் உண்மைப்
பேறகத் தெய்தும்நாள் உளதோ ?
மாண்அகத் துணைக்கொண்டகண்டஞா னச்சீர்
வாய்ந்திடும் கலசம்ஆ தவனில்
சேண்நகர் சிகரிக் கலசம்ஆர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (16)

( ஊண் - உணவையும். அகத்து அவிரும் - உடலில் விளங்கும். பூண் - ஆபரணங்களையும். அகத்து - மனையையும். அகத்து இச்சை - மன விருப்பம். பேறுஅகத்து - பயனாகிய முத்தியில். மாண்அகத்து - பெருமை வாய்ந்த தனக்குள். ஆதவனில் - சூரியனைப்போல. சேண்நகர் - ஆகாயத்தில். சிகரிக்கலசம் - கோபுரக்கலசம். ஆர் - பொருந்திய .)

71. பங்கமா மாயை அலைக்கும்என் உள்ளப்
பால்அறா தோங்குமெய் ஞானச்
செங்கம லத்தாள் கண்டமை தரநின்
திருவருட் கண்உத விடுவாய் ;
மங்கள மணிமா டத்தகிற் புகையில்
மீறைஅரி வையர்முகம் புயல்சார்
திங்கள்பற் பலஎன் றிசைஅணிப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (17)

( பங்க - துன்புறுத்துகின்ற. உள்ளப்பால் - மனத்தின்கண். கண்டு அமைதர. மாடத்து அகிற்புகையில் மறை - மறைகின்ற. அரிவையர் - மகளிர், பருவம் சுட்டாமல் பொதுவாக நின்றது. புயல்சார் திங்கள் - மேகங்களுக்கிடையேயுள்ள முழுமதி .)

72. கோரிய பயன்முற் றுறக்கரு ணையினால்
கொடைபுரி வள்ளல்நீ இருக்கக்
காரிகைத் தலைசேர் காரிகை யாரைக்
கருதிவீண் நாள்கழித் தொழிந்தேன் ;
மாரியில் தேன்பெய் வான்அணை தருப்பால்
மண்டிசைச் சுரும்பர்சூல் முகிலில்
தேரியற் காட்சி பொலிவியன் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (18)

( காரிகைத்தலைசேர் - சனி தம் கைகளினிடத்தே இருக்கப் பெற்றவர்களும், சனியன் பிடித்தவர்கள் என்பது போன்ற ஆட்சி. கார் இகையாரை - இரக்கம் இல்லாது வயிரம் பாய்ந்த நெஞ்சினைப் பெற்றுள்ள ஈயாத உலோபிகளை , வினைத்தொகை. மாரியில் - மழைபோல. -வான்அணை - வானளாவிய. தருப்பால் - மரங்களில். மண்டு - நெருங்குகின்ற. சுரும்பர் - வண்டு. வண்டுக்கூட்டம் மேகம் போல் தோன்றுகிறதாம்.)

73. பின்னிய ஆசை கயிற்றினுட் பட்டுப்
பிரமைமிக் ககம்தளர் வேனை
அன்னியன் எனக்கை விட்டிடில் என்னை
ஆள்பவர் யார்? உரைத் திடுவாய் ;
மன்னிய படியிற் சார்ஒளி விளக்கின்
வரிசைபா தலத்தவிர் சேடன்
சென்னிதோய் மணிகள் ஒத்தவிர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (19)

( பிரமை மிக்கு - மயக்கம் அதிகரித்து. மலைப்படிகளில் எரியும் விளக்குகள் ஆதிசேஷனின் தலையில் உள்ள மாணிக்கங்களைப் போலக் காட்சியளிக்கின்றன. )

74. கயல்உறழ் விழியால், புயல்உறழ் குழலால்,
கதிர்மணி வடக்கன தனத்தால்
மயல்உறப் புரியும் மாதரைப் பொருளா
மதித்திடா மதிச்சிறப் பருள்வாய் ;
வியன்உற மேல்மேல் இவர்தொறும் காட்சி
விதம்கொடு மேலவர் இயற்றும்
செயல்மலி படிகள் இசைந்திடும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (20)

( உறழ் - போன்ற. புயல் - மேகம். குழல் - கூந்தல். கதிர்மணி வட - ஒளிவீசுகின்ற மணிமாலைகளைப் பூண்டுள்ள. மயல் - காம மயக்கம். மதிச்சிறப்பு - அறிவு நலம். இவர்தொறும் - ஏறஏற. சான்றோர்கள் தம்பால் அடைந்தவர்களை மேலும் மேலும் உயர்த்துவர் ; படிக் கட்டுகளும் அவ்வாறே செய்கின்றன.)

75. போதன்அங் ககங்கா ரம்கொடு வணங்கான்
போந்திட வலிதுதண் டனைசெய்து
ஆதரித் துபதே சித்ததா ரகத்தின்
அரும்பொருள் எனக்கும்ஈந் தருள்வாய் ;
மீதமை அண்ட முகடுமட் டுயர்ந்து
மேகமே னிவந்துவிற் கொண்டு
சீதான் நிகர்சீர்ச் சிகரிதோய் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (21)

( போதன் - பிரமன். அங்கு - அப்போது, அந்த இடத்தில். அகங்காரம் - கருவம். தாரகத்தின் - உயிர்களை காப்பாற்றுவதாகிய மந்திரம், பிரணவத் திறனுடைய. இப்பாடலின் பிற்பாதி மலைக்கும் திருமாலுக்கும் சிலேடை )

அண்டமுகடுவரை மலை உயர்ந்துள்ளது; திருமால் உயர்ந்தது திரிவிக்ரம அவதாரத்தில். மேகம் மேல் நிவந்து - மேகங்கள் மலையின் மேல் ஏறுகின்றன. மேகமேனி வந்து - திருமால் மேகவண்ணத் திருமேனியைப் பெற்றவர். வில்கொண்டு - மலைக்கு வானவில்; திருமாலுக்குச் சார்ங்கம் என்னும் வில். சிகரி - சிகரம். இனி விற் கொண்டு என்பதற்கு ஒளியை உடைத்தாகி என உரைத்து இச் சிலேடையைக் கோபுரத்திற்கு ஆக்கினும் அமையும்.)

76 கோபமும் மதமும் காமமும் என்றும்
குடிபுகும் என்னகத் தணியார்
நீபமுந் தியவான் மலைமணத் திருத்தாள்
நிலைபெற நீபுரிந் தருள்வாய் ;
தூபமும் முகிலும் முரசமும் மடங்கல்
தொனியும்மின் னலும்கருப் பூரத்
தீபமும் மருட்சி கொளஇசை பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (22)

( மதம் - செருக்கு. என் அகத்து. நீபம் உந்திய - கடம்ப மலர்கள் உயர்ந்து விளங்குகின்ற. மடங்கல் தொனி - சிங்கத்தின் கர்ஜனை. தூபப்புகை - மேகம்; முரசம் - கர்ஜனை; மின்னல் - கருப்பூர தீபாராதனை. மருட்சிகொள - ஒன்றை மற்றொன்றாக மயங்குமாறு. )

77. பார்ச்சிறப் புற்ற வாழ்க்கையும், விண்ணப்
பண்ணவர் களிப்புடன் வழுத்தும்
பேர்ச்சிறப் புற்ற சித்தியும், முத்திப்
பேறும்யான் உறஅருள் புரிவாய் ;
நீர்ச்சிறப் புற்ற மகரமீ னத்தை
நேரும்இ ரவிகொள்மா தத்தாம்
தேர்ச்சிறப் புற்ற திருவிழாப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (23)

( பார்ச்சிறப்பு - உலகியற்பெருமைகள். விண்ணப்பண்ணவர் - வானுலகத் தேவர்கள். வழுத்தும்பேர் - போற்றும் புகழ். நீர்ச்சிறப்புற்ற - நீர்வாழ் இனத்தில் பெருமை பெற்ற. மகர மீன இராசிகளில் சூரியன் உலவும் மாதங்கள் தை, பங்குனி ஆகும். தைப்பூசம், பங்குனி உத்திரம் தேர்த்திருவிழா. )

78. விருத்தியல் களிப்புற் றீர்க்கும்ஐம் புலம்சால்
விடயபோ கத்துறா தகத்தை
இருத்தி, உன் பால்ஆம் இன்பவா ரிதியுள்
யான்அடைந் திடும்படி இசைப்பாய் ;
பொருந்தியற் சித்திரப் போகமா முனிசீர்
புகல்புலிப் பாணிமா முனிஉள்
திருத்தியில் புரியும் பூசைகொள் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (24)

( விருத்தி - செயல்பாடு. ஈர்க்கும் - இழுக்கும். விடயபோகத்து - இன்ப நுகர்வில். வாரிதி - கடல். இயல் சித்தி பொருந்து என இயையும், எதுகை நோக்கிய வலித்தல் விகாரம். உள் திருத்தியில் - மனநிறைவோடு. புலிப்பாணிச் சித்தர் போகரின் மாணவர் .)

79. கூரணி வேல்ஒத் துழையினில் மருண்டு
குழைபொரு மழைவிழி மாதர்
கோரணி மாயக் கூத்தில்என் உள்ளம்
குமைதரா தமைதரப் புரிவாய் ;
ஏரணிக் கயிலை மிசைஉலா அரங்கேற்
றிடப்பரி ஊர்ந்துசெல் மகிமைச்
சேரலன் இயற்றும் திருப்பணிப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 25)

( கூர் அணி உழையினில் - மானைப்போன்று. குழைபொரு - காதணிகளை நோக்கித் தாவுகின்ற. மறைவிழி - குளிர்ந்த கண்கள். கோரணி - நகைப்பிற்கிடமான ( ஏமாற்றுவதில் ) திறமை மிக்க எனினும் ஆம். குமைதராது - வருந்தாமல். ஏர்அணி ஒரு பொருட் பன்மொழி. உலா - திருக்கைலாய ஞான உலா ஆகிய ஆதி உலா. பரி - குதிரை. சேரலன் - சேரமான் பெருமாள் நாயனார்.)

80. புளியுறு பழம்போல் வல்வினைக் காயம்
புணர்ந்துநின் றும், பொருந் தாமெய்
ஒளியுறும் உனது பாதபங் கயத்தி -
னுள்இசை அருள்நலம் உதவாய் ;
அளிமலர் வாவிச் சேல்எழல், " இந்நீர்
ஆடுதி ரேல்பிறப் பறும்வான்
தெளிவிர் " என் றுணர்த்தல் நிகர்த்திடும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 26)

( புளியம்பழம் ஒட்டிற்குள் இருந்தாலும் அதனோடு ஒட்டாமல் தனித்து இருப்பது உலகில் இருந்தாலும் உலகியலில் மூழ்காத மன நிலைக்கு உவமை. வல்வினைக் காயம் - வலிமை மிக்க வினைகளின் பயனாகிய உடல். ஒளி - புகழ். இசை - பொருந்தும். அளி -

தேன்நிறைந்த. வாவி - இரட்டுற மொழிதலாக நீர்நிலை, தாவி என இருபொருளும் கொள்க. சேல் - ஒருவகை மீன். குளத்தில் மீன் துள்ளுவது அதில் நீராடுபவர்கள் பிறவி நீங்கிச் சுவர்க்கம் பெறுவர் எனக் காட்டுகிறதாம்.)

81. தந்தன இடையார் பந்தன வாசச்
சந்தனத் தனம்பெறத் தனம்தந்து
இந்தனம் எனக்கா மக்கன லிடைவெந்து
இறப்புறாச் சிறப்புத விடுவாய்;
நந்தனை குளக்கண் ஈடிப்பைந் தளநீர்
நன்மணி எடுத்தலர் பொழிந்து
செந்தரை மகள்வந் தனம்புரி பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (27)

(தந்துஅன - நூலைப் போன்ற. பந்துஅன - பந்தினைப் போன்ற. தனம் - 1. நகில். 2. பணம். இந்தனம் - விறகு. நந்துஅணை - சங்குகள் சேருகின்ற. பைந்தள - பசிய தாமரையிலையிலுள்ள. மணி - ரத்தினம். அலர் - மலர்கள்.)

82. மலைமணம் கமழ வரம்பில்ஆட் டியற்றுன்
வாரிசப் பதத்துணை அடியேன்
தலைமணம் கமழச் சூட்டிடில் உன்னைத்
தடைபுரி வார்எவர்? சாற்றாய்;
உலைவரும் அம்பு பெய்துவன் பலம்கொன்று
ஓங்கறம் வளர்த்தலின் அடல்லெம்
சிலைஎனும் இருமைப் பொருள்பொலி பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (28)

(வாரிச - தாமரை போன்ற. சிலேடை, அம்புபெய்து - (மலை) தண்ணீர் அருவி பொழிந்து, (வில்) கணைகளை எறிந்து. பவம் கொன்று - (மலை) செழிப்பாக்கி வறுமையால் ஏற்படும் பாவத்தை அழித்து, (வில்) பாவம் செய்தவர்களைக் கொன்று. அறம் வளர்த்தல் - இரண்டிற்கும் பொது. அடல் - வலிமை மிக்க. வெம் - (மலைக்கு) விரும்பப்படுகின்ற (வில்லிற்கு) கொடிய. சிலை - மலை, வில்.)

83. சீகரக் கமம்சூல் முகில்எதிர் நடம்செய்
சிகிப்பரி மேல்சகிப் பரிய
சோகம்உற் றேன்கண் கண்டுவந் தின்பச்
சோனைபெய் திடஎதிர் தோன்றாய் ;
போகமுற் றரம்பை யரைத்தரும் அமிழ்தைப்
புறம்எறிந் தமரர்கொள் ஞ. ா
சேகரப் பஞ்சா மிருதம்ஆர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (29)

( சீகர கமம் சூல் முகில்எதிர் - மழைத்துளிகளாகிய நிறைந்த கருப்ப முற்ற மேகங்களுக்கு எதிரே. சகிப்பரிய சோகம் உற்றேன் (ஆகியநான் ) உவந்து , பெய்திட பரிமேல் எதிர் தோன்றாய் என்பது முடிவு. முற்று அரம்பையர் போகத்தைத்தரும் என மறுக. புறம் எறிந்து - நீத்து. சேகரம் - வருவாய் போன்ற. )

84. காலபா சத்தை மேல்உறக் கூட்டும்
காமகாஞ் சனப்பொருள் காட்டும்
ஞாலபா சத்தைக் கடந்திட நின்மெய்ஞ்
ஞானவா சத்தைநல் கிடுவாய் ;
பாலபி டேகம் கண்டுபோற் றினர்க்கப்
பாற்கொள்பட் டாபிடே கம்எனச்
சீலவா ரிசத்தாள் சூட்டருட் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (30)

(காலபாசம் இயமனுடைய பாசக்கயிறு காமப்பொருள் காஞ்சனப் பொருள் எனத்தனித்தனி இயையும் ஞால பாசத்தை உலகப்பற்றை அப்பால் பிறகு பட்டாபிடேகம் முடிகட்டுவிழா தாளாகியகிரீடம்)

முகம் தழைத் திட்ட விழிகள்உன் வடிவம்
உகந்தழைத் திட்டதற் கிரங்கி
அகம்தழைத் திட்ட உன்அடிக் கமலத்
தகம்தழைத் தியல்சுகம் அருள்வாய்
சுகந்தம்ஆர் அபிடே கங்கள்ஆ ருயிர்கொள்
சுவாசவி சுவாசம்உற் றிசையும்
திகந்தம்உற் றுணர்ஞா னம்தரும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (31)

(வடிவம்—உருவத்தை உகந்து அழைத்திட்டதற்கு அகம் தழைத்திட்ட உள்ளத்தில் செழித்துள்ள. கமலத்தகம் - தாமரையினுள். சுகந்தம் - நறுமணம். சுவாசம் - விசுவாசம். உற்று - மூச்சில் பத்தியைச் சேர்த்து. திக் அந்தம் - திசைகளின் எல்லை வரை )

86. பாக்கிய மனிதப் பிறவியால் அடையும்
பயன்எனும் உன் அருட் கனிவாய்
வாக்கியத் தார கப்பொருள் உணர்சின் -
மயஅநு பூதிஈந் தருள்வாய் ;
நோக்கியற் கண்கொண் டுன்திரு வடியுள்
நுழைந்தவர் விழைந்தவாழ் வுதவித்
தேக்கியல் தணிவீ டுறப்புரி பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (32)

( வாக்கிய - மொழி ஆகிய. தாரகப் பொருள் - பிரணவப்பொருள். சின்மய - ஞானமயமான. தனிவீடு - ஒப்பற்ற முத்தி. )

87. காற்றியல் ஒட்டைத் துருத்தியான் என்னக்
காதல்ஆர் போ தும்ஈந் தெதிர்தோய்
கூற்றியல் கடத்தற் கோர்வழி தேரேன்
குலைகுலைந் தனன் ; அருள்புரிவாய் ;
நீற்றியல் மேனி கண்டவர் பவநோய்
நீற்றி, ஆ னந்தஊற் றமையுத்
தேற்றி, அற் புதவாழ் வளித்திடும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (33)

( காற்று இயல் - மூச்சுக்காற்றால் இயங்குகின்ற. யான் என்ன - ஆன்மா ஆகிய நான் என்று. சுற்று இயல் - இயமன் தரும் மரணம். தேரேன் - தெரியாதவனாகி, முற்றெச்சம். நீற்று இயல் - திருநீறு பூசப்பெற்ற. பவநோய் - பிறவிப்பிணி. )

88. அலம்பகக் கரணம் ஒடுக்கிமெய் ஞானா -
னந்தவாழ் வமைக்கும்நின் சீர்த்திக்
குலம்பகர்ந் தவிர்வீ ரக்கவு மாரக்
கூட்டமுட் கூட்ட எண் ணிடுவாய்;
கலம்பகச் சந்தக் காப்ணி மேனி
கண்டகண் ணினார்க்கருட் பொதியைச்
சிலம்பகக் கலசன் நிலைஅருள் பழனி
சிவகிரித் தண்டபா ணியனே! (34)

( அலம்பு - சந்சலித்திடுகின்ற அகக்கரணம் - அந்தக்கரணம் மனம் சீர்த்திக்குலம் - புகழ்ப்பெருக்கம் கூட்டமுள் - கூட்டத்துள் அச்சுச் சாரியை கெட்டது. கலம்பக - பலவாசனைப் பொருள்களின் கலவை ஆகிய சிலம்பு அக கலசன்--- மலையை வீடாகக் கொண்ட கும்பமுனி)

89. வரத்தின கரனாய் உலகுயிர்க் குலம்கொள்
வாஞ்சைமுற் றுறஅறை கூலித்
தரத்தினம் விருது கொண்டமை தரும்நின்
தயவினுக் கெல்லைஏ தறியேன்
இரத்தினத் திரள்கொண் டமைஅருட் சோதி
இன்பமெய்ச் சேவைஏத் துநர்தம்
சிரத்தில் நன் மலர்த்தாள் பதித்தருள் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே (35)

( வர - மேன்மைமிக்க. தினகரன் - சூரியன். விருது கொண்டு - எல்லை ஏது. சேவை - தரிசனம். )

90. மைத்துரு மக்குன் றினம்தொ றும் நடம்செய்
மங்கள வைபவ ஞான
வித்துரு மக்குன் றினைஅருள் முத்தி
வித்துரு அகத்தில்வித் திடுவாய் ;
பத்துரு இசைமால் விழிகொள் ஆனந்த
பாட்பமாம் திருவருள் இன்பச்
சித்துரு அன்னை மார்மகிழ் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (36)

( மை துரும குன்றினம் - மேகங்கள் படிவதும் மர இனங்கள் நிறைந்ததும் ஆகிய மலைக்கூட்டங்கள். வித்துரும குன்றினை - பவள மலை போன்றதேவரீரின் திருவுருவத்தை, உவம ஆகுபெயர். வித்துஉரு - விதையின் வடிவமாக, மூலகாரணமாக. வித்திடுவாய் - விதைப்பீராக. பத்து உருஇசைமால் - பத்து அவதாரங்களை எடுத்த திருமால். பாட்பம் - கண்ணீர். அன்னைமார் - வள்ளி தெய்வயானை நாயகியர். )

91. நரைதிரை மூப்பாம் புரைநிறை உடலை
நான்எனக் கருதிஅங் கதற்காம்
இரைகௌத் தீவாந் தரம்புகுந் திளைப்பேன்
ஏற்றமெய்க் கதிபுகல் எளதோ?
கரையில்வன் பவத்தர் மூழ்கிடில் அந்தக்
கணத்தவம் பிரிதரல் காட்டும்
திரைஎறி தீர்த்தக் கணம்பொலி பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (37)

( புரைநிறை - குற்றங்கள் மிக்க. அங்கு அதற்கு ஆம். இரை -உணவு. தீலாந்தரம் - பல்வேறு தீவுகள். இளைப்போன் - வருந்துபவனாகிய அடியேன். ஏற்ற - உயர்ந்த. பவத்தர் - பாவிகள். அவம் - தீமை. பாவம். திரைஎறி - அலை வீசும். கணம் - கூட்டம் .)

92. துறைஇசைப் பொலிவார் பரிமள அமுதச்
சுவைமலி சின்மயா னந்தம்
நிறை அணித் தமிழ்கொண் டுனைத்துதித் தடியேன்
நெஞ்சம்நெக் குருகிடப் புரிவாய்;
நறைமலி கமலத் தயன்கைசேர் விதியால்
ஞாலமார் உயிர்க்கிசை யாக்கைச்
சிறைஒழித் தருட்பூ ரணத்திசை பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (38)

( துறைஇசைப்பொலிவு - பாடு பொருளை எவ்வாறு சொல்ல வேண்டும் என்னும் வரையறையாகிய அகப்புறத் துறைகளாலும், ஓசை இனிமையாலும் அழக பெற்ற. பரிமளம் - நறுமணம். கமலத்து

அயன். அயன் - பிரமன். ஞாலம்ஆர் - உலகத்தில் பொருந்துகின்ற. யாக்கைச்சிறை - உடலாகிய சிறைச்சாலையை. இசைபழனி - பொருந்துகின்ற பழனி. வினைத்தொகை.)

93. சுரும்புறழ் அடியார் இனம்மனம் கரைந்து
துதித்துய்தல் மதித்தருட் சுதிசார்
திருப்புகழ்த் தேன்ஈந் தருள்சுக நாதன்
செப்புதல் போல்மெல்ல மெல்ல
இருப்புறும் இன்பம் பழப்படி யாக
ஏற்றிப்பின் இயம்கசப் பித்துத்
திருப்புறாப் பதத்தேற் றிடும்புகழ்ப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (39)

( சுரும்பு உறழ் - வண்டுகளைப் போன்ற. துதித்துஉய்தல். மதித்து - கருதி. சுகநாதன் - கிளியாகிய அருணகிரிநாதர். இகம் - இவ்வுலக வாழ்வை. திருப்பு உறாப்பதம் - மீட்டு இங்கு வாராத வீடு. இப்பாடல்

பெரும்பைம் புனத்தினுள் சிற்றேனல் காக்கின்ற பேதைகொங்கை
விரும்பும் குமரனை மெய்அன்பி னால்மெல்ல மெல்லஉள்ள
அரும்பும் தனிப்பர மானந்தம் தித்தித் தறிந்த அன்றே
கரும்பும் துவர்த்துச் செந் தேனும் புலித்துக் கைத்ததுவே. (6)

என்னும் கந்தர் அலங்காரப் பாடலை நினைந்து கூறியது.)

94. வானிறை மகளும் கான்இறை மகளும்
வலம்இடம் பொருந்தமத் தியினில்
மானிறை பவள வரைஎனப் பொலிநின்
மங்களச் சேவைஎன் றருள்வாய்?
சூனிறை காரில் பொலிந்தகார் ஆன்கள்
சொரிந்தபால், கனிரசம், துனர்பெய்
தேனிறை தரங்க வாலிசூழ் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (40)

( வான்இறை - தேவேந்திரன். கான்இறை - காட்டின் அரசன், நம்பிராஜன். வலம்இடம் எதிர் நிரனிறை. மால்நிறை - பெருமை நிறைந்த. சேவை - தரிசனம். சூழ்நிறை. காரில் - மேகம்போல்.

கார்ஆன்கள் - காராம் பசுக்கள். துணர் - மலர்க்கொத்துகள். தரங்க - அலைகளை உடைய.)

95. அரியமா னிடம்தோய் உடலளித் தன்பால்
அருட்குரு வாகிவந் தாண்டும்
உரியநல் நிலையில் இசைஅநு பவச்சீர்
உதவிடா மையின்உளம் திகைத்தேன்;
அரிவையர் மைந்தர் துருத்திபெய் பனிநீர்
அளற்றினை அனிபரி மளம்சார்
தெரியல்கள் உயர்த்தும் மறுகமை பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (41)

(இசை - பொருந்துகின்ற. அரிவையர் மைந்தர் - மகளிரும் ஆடவரும், உம்மைத்தொகை. பருவம் நோக்காது பொதுப் பொருளில் வந்தது. துருத்தி - பீச்சாங்குழல். அளற்றினை - சேற்றை. அணி - அணிகின்ற. தெரியல்கள் - மலர்மாலைகள். மறுகு - வீதிகள்.)

96. வினைத்தடை உடலுள் இடந்தழி போக
விருப்பினுள் வெதும்பினேன்; உன்தாள்
நினைத்தடை தரப்பாழ் மாயைநீங் கிலதென்
நெஞ்சகத் தென்செயக் கடவேன்?
தினைப்புனக் காவல் கிளிகடி வேடச்
சிறுமியர் கவண்இசை மணிக்கல்
சினைக்கனி களைக்கீண் டளிக்கிடும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (42)

(கிடந்து அழி நினைத்து அடைதர என் நெஞ்சகத்துப் பாழ் மாயை நீங்கியது என் செயக்கடவேன் என்பது அந்வயம் கடி - துரத்துகின்ற சினைக் கனிகளை - மரக்கிளைகளில் உள்ள பழங்களை கீண்டு - கிழிந்து அளிக்கு - வண்டுகளுக்கு)

97. பொங்கிடும் அகண்ட பூரண வாழ்வுன்
புடைஇருந் திடவும்அர் தருந்தாது,
இங்குறு வாழ்க்கை யினில்மெலிந் தடியேன்
இளைத்திடல் மரபுகொல்? இசைப்பாய்;
மங்குல்ஓர் இளைப்பு மாற்றிய தெனக்கைம்
மாறதா நீர்நிழல் அளித்துத்
தெங்குற அமைந்து தவழ்வளப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (43)

( மங்குல் மேகம். இளைப்பு - களைப்பு. கைம்மாறு அதுஆ என்புழி அது பகுதிப்பொருள் விகுதி. தெங்குஉற - தென்னை மரத்தில் பொருந்தி. )

98. மருவிழாக் கமலத் துணைப்பதம் பொலிசின்
மயஅநு பூதிபெற் றடியேன்
கருவிழாக் கதிஉற் றுய்ந்திடும் வண்ணம்
கடைக்கணித் தருள்; அடைக் கலம்யான்
திருவிழாக் காட்சி கண்டுரு கன்பர்
திரளிடை திலம்எறிந் திடினும்
தெருவிழா மகிமை நிறைஅணிப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (44)

( மரு விழா கமல - நறுமணமும் மங்கலத் தன்மையும் பொருந்திய தாமரை போன்ற. கருவிழா - பிறப்பில் விழாத. திலம் - எள். தெருவிழா - வீதியில் விழாத. கூட்டம் எள்ளுப் போட்டால் எள்ளு விழாது என்பது பழமொழி.)

99. குவிமனம் கரைந்து, நெக்குநெக் குருகிக்
கொண்டல்ஒத் தின்பநீர் பொழிய,
விவிதஅற் புதம்நின் திருப்புகழ்த் துதிகள்
விளம்பி, ஏத் திடஅருள் புரிவாய்;
கவின்அறா மீன், பால், சேவல், சர்க் கரைக்கா -
வடியினர் அரகர முழக்கம்
செவிடுற அண்ட கடாகம்ஆர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (45)

( குவிமனம் - ஒருமுகப்பட்ட உள்ளம், வினைத்தொகை. கொண்டல் - மேகம். விவித - பலவிதமான. கவின்அறா என்னும் அடையைக் காவடியோடு இயைக்க. அண்டகடாகம் - வானப்பெருவெளி . )

100 கனவுடன் நனவி னிடைஅக லாதுன்
காட்சிகண் டுலகமால் ஒழிந்த
அனகமா தவத்தோர் தோய்அருட் காட்சி
அளித்து , முத் தியினும்உய்த் தருள்வாய் ;
சினமலி வேடர் எய்திடும் வாளி
தீஞ்சுவைக் கனிகள்கோத் தெழுந்து
தினகரற் களிக்கும் பண்பிசை பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (46)

( உலகமால் - உலகியல் இன்பங்களில் விருப்பம். அனக - குற்றமற்ற. வாளி - அம்பு. கோத்து - தன் தலையில் தொடுத்துக் கொண்டு. தினகரற்கு - சூரியனுக்கு. பண்பு இசை - தன்மை பொருந்திய . )

101. பொய்வரும் உலக வாழ்வி து மட்டும்
போ தும்மெய் ஞானவை பவச்சீர்
கைவரும் படிநின் கிண்கிணி அணித்தாள் -
களைச்சிரத் தமை ! அடைக் கலம் யான்;
தைவரும் வெற்றி லைக்கொடிப் பூகம்
தமநிய நாட்டிசைந் தணியார்
தெய்வமங் கையர்க்கின் பீந்திடும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (47)

( தைவரும் - வானத்தைத் தடவுகின்ற. வெற்றிலைக் கொடிப்பூகம் - வெற்றிலைக் கொடிகளால் சுழப்பெற்ற பாக்கு மரங்கள். தமநிய நாட்டு இசைந்து - பொன் உலகில் பொருந்தி, வானளாவி. இன்பு ஈர்ந்திடும் - ( வெற்றிலை பாக்கு அளித்து கௌரவப்படுத்துவதால் ) மகிழ்ச்சி அளிக்கும். )

102. மாண்பமை தரும்நின் திருவடி கருதார்
மானிட மேனிகொள் வதினும்
வீண்படு கானத் திசைவிலங் காயின்
மேன்மை; அன் பினர்வசை இலையாம்;
காண்பரும் கயிரலப் பாற்கொள்சே ரனைநேர்
கண்டுவந் திடுதல்போல் உயர்ந்து
சேன்படும் சிகரித் தூபிஆர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (48)

( மாண்பு அமைதரும் - விண்படு விலங்கு, கானத்து இசை விலங்கு எனத் தனித்தனி இயையும். வசை - பழிமொழி. கயிலைப்பால் கொள்சேரனை - கயிலைக்குச் சென்ற சேரமான் பெருமாள் நாயனாரை. நேர்கண்டு - கண் எதிரில் சந்தித்து. சேன்படும் - வனாளாவும், சிகரித்தூபி - கோபுர கலசம்.)

103. பூவலம் புரிந்தும், கடலில்நல் நதியில்
புக்குடல் நனைத்தும்என்? நின்தாட்கு
ஆவல்அன் பமையா மனிதர்கட் கவதி
அல்லது பயன்உள தாமோ?
பாவலங் காரத் துதிக்கவு மாரப்
பக்தர்கள் செயம்செயம் என்னச்
சேவலங் கொடிச்சீர் புகழ்அணிப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (49)

( கடலிலும் நதியிலும் என எண்ணும்மை விரிக்க. புக்கு - புகுந்து நீராடி அவதி - துன்பம். "கோடி தீர்த்தம் கலந்து குளித்தலை ஆடினாலும் அரனுக்கன் பில்லையேல் ஓடு நீரினை ஓட்டைக் குடத்தட்டி மூடிவைத்திட்ட மூர்க்கனோ டொக்குமே." (தேவாரம் - 5-99-9) என்பார் அப்பர் பெருமான். அலங்காரப்பாத்துதி என மாறுக, அழகிய பாடல்களாகிய தோத்திரம், கந்தரலங்காரப் பாக்களால் துதிக்கின்ற எனினும் ஆம்.)

104. பந்தினை நிகர்க்கும் தனத்தர்மத் தியிற்போய்
பாவம்ஆர் அனங்கவேள் விழவில்
நொந்தினை யாதுன் பதமலர் போற்றும்
நோன்பில்யான் வான்புகப் புரிவாள் ;
செந்திணைக் கொல்செந் நீர்ப்புலைப் பூசை
தீர்வன வேடுவர் அன்பால்
செந்தினைத் தேன்மா இடும்இசைப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (50)

( அனங்கவேள் விழவு - கலவி. நொந்து இணையாது - வருந்தாமல், ஒருபொருட் பன்மொழி. நோன்பில் - விரதத்தால், உருபுமயக்கம். செந்தினை - பிராணிகளை. செந்நீர் - இரத்தம். புலப்பூசை - இழிந்த வழிபாடு. தீர் - நீத்த. செம்தினைமா தேன் என இயையும். இசை - புகழை ( சிறப்பினை ) உடைய. " வில்லு டன் புகும் வேடரும் சேறுயிர்க் கொல்லும் நீர்மை தவிர்ந்த தக் குன்றமே " ( புலவர் புராணம் 59 ) என்பார் வண்ணச் சரபர்.

105. மருஅலங் காரக் கடம்பலர் பவள
மலைமிசை நீற்றணி அவிரும்
குருஅலங் காரச் சோதிகண் டுள்ளம்
குளிர்தரு நாள்எது ? கூறாய் ;
தருஅலங் கார நகரினும் மாட்சி
தழைஅலங் காரமெய்த் தவர்சூழ்
தெருஅலங் காரம் மிக்கவிர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (51)

( மரு - நறுமணமும். அலங்கார - அழகும் கொண்ட. குரு - ஞானதேசிகன் ஆகிய. தரு அலங்கார நகர் - கற்பகம் முதலிய ஐந்து தெய்வீக மரங்களால் பொலிவுபெற்ற அமராவதி, சுவர்க்கம். மாட்சி தழை - சிறப்பு மிகுகின்ற . )

106. புள்ளிமா மயில்மீ தருட்பெருஞ் சோதி
பொலியும்நின் தெரிசனம் அடியேன்
உள்ளினில் புறத்தில் கண்டுகண் டுவக்கும்
உண்மைஅன் பென் அகத் தமைப்பாய்;
வள்ளியில் எமையும் புரந்தருள் என்ன
வனசரக் கன்னியர் தினைமாத்
தெள்ளிஉள் அன்பால் ஊட்டிசைப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (52)

( உள்ளினில் - மனத்திற்குள்ளும். அன்பு என் அகத்து. வள்ளியில் - வள்ளி நாயகியை ஆட்கொண்டதைப்போன்று. புரந்தருள் - காப்பீராக. வனசரக் கன்னியர் - வேட்டுவக் கன்னிகள். தெள்ளி - கொழித்து. ஊட்டு இசை - அருந்துவிப்பதாகிய பெருமை. )

107. மையினை என்ன மைஇடும் விழியார்
மையல்வா ரிதிகடந் துன்தாள்
மெய்யினை உள் அக்குகள மாரர்பெற் றிட்ட
வீரமாண் பெனக்கும்ஈந் தருள்வாய் ;
எய்யிடர் மெய்நீத் தருந்தவம் புரிவோர்
இதயபங் கயம்நிகர்த் தணிநன்
செய்யிடம் விரிந்த மலர்நிறை பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! ( 53 )

( மைஇணை என்ன - இருளைப்போன்று கரிய. உன்மெய்த்தாள் - இணைஉள்அ கௌமாரர் என்றபடி . எய்மெய் இடர் - வந்து பொருந்துகின்ற உடலாகிய ஆபத்து. பிறவி அணி - அழகிய. )

108. முகில்இவர் இறைவன் நகரினில் புகுந்து
முருகணிப் பாரிசா தப்பூ
மகிதலத் திறைவற் களித்தவள் உளம்தோய்
மாண்பநு பூதிஈந் தருள்வாய் ;
மகிமைமா தவக்கௌ மாரர்சா ரூபம்
மருவுகால் கைக்கௌ வரம்பில்
சிகிஅயில் சேவல் மலிஅணிப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! ( 54 )

( முகில் இவர் இறைவன் - மேகவாகனன். இந்திரன். முருகுஅணி - நறுமணமும் அழகும் வாய்ந்த. மகிதலத்து இறைவற்கு - நிலஉலகில் ஒரு பகுதியை ஆண்ட பிரபுடதேவராயனுக்கு. அளித்தவன் - அருணகிரிநாதர். பழனியில் மயில், வேல், கோழி, ஏராளமாக இருப்பது யோகத்தால். சுப்பிரமணிய சாரூப முத்திபெறப்போகும் அடியார்களுக்கு வழங்கப் படுவதற்காக என்கிறார். தற்குறிப்பேற்ற அணி.)

109. புலம்பரி துயரக் கூட்டினுள் பொருந்திப்
புழுங்கும்வன் பழங்கண்முற் றகலும்
நலம்புரிந் திட, என் முன்அவிர்ந் தருட்கண்
நாட்டி, மெய் வீட்டுறப் புரிவாய் ;
வலம்புரி தரும்எண் ணற்றவர் துதிஆர்
வாழ்த்தினம் கொண்டத்து விதமாய்ச்
சிலம்புரித் தமையும் அகண்டமாம் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (55)

( புலம்பரி - ஐந்து புலன்களால் ஏற்படுகின்ற. புழுங்கும் - வருந்தும். பழங்கண் - துயரம். முற்றும் அகலும் நலம்என முற்றும்மை விரிக்க. வலம்புரி தரும் - வலம்வருகின்ற. கொண்டு அத்து விதமாய். சிலம்புரித்து - ஒலித்து. பலவிதமான வாழ்த்தொலிகள் ஒன்றாகக் கலந்து பிரிந்து உரை இயலாதபடி மலையில் ஒலிப்பதால் அத்து விதமாய் என்கிறார். அகண்டம் - பூரணப்பொருள்.)

110. இந்திரன், அளகைப் பதிப்பதி பெறும்வாழ்வு
இன்பமும் துன்பெனக் காட்டும்
மந்திர அருட்ச டாக்கரம் செபித்துன்
மலர்ப்பதம் கருதும்மாண் பருள்வாய் ;
மைந்துரப் படைக்கை வீரரும் , தேரும்,
வாம்பரிக் குலமும்,மும் மதம்தோய்
சிந்துரங் களும்சூழ் மறுகவிர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (56)

( அளகைப்பதிப்பதி - அளகாபுரியின் மன்னன், குபேரன். சடாக்கரம் - ஆறெழுத்து. மைந்துஉர - வலிமை மிக்க, ஒருபொருட்புன்மொழி. வாம் - தாவுகின்ற. சிந்துரங்களும் - யானைகளும். மறுகு - தெரு. )

111. கரத்திசை அமுதம் எறிந்து, கொல் ஆல
காலம்எங் கெனஅலை குநர்போல்
பரத்திசை உன்தாள் பத்திவிட் டுலகப்
பற்றிடர் முற்றிடப் பறந்தேன் ;
வரத்திசை நதி, சண் முகநதி, வையா -
புரி, சர வணத்தடம், வாய்க்கால்
சிரத்திசை கண்போல் பொலிஅணிப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 57)

( கரத்து இசை - கையில் உள்ள. பரத்து இசை - வீட்டின்பத்தில் சேர்க்கும். இசைவரத்து நதி - புகழ்மிக்க வரத்தாறு, பேச்சு மொழியில் வரட்டாறு என்பர். வையாபுரி - வையாபுரிஎரி. சரவணத்தடம் - சரவணப்பொய்கை. சிரத்து இசை - தலையில் பொருந்தியுள்ள. )

112. வார்த்திகம் நெருங்கும் உடற்சிறை யிடைசெய்
வகைமறந் தலைதரும் எனைக்கண்
பார்த்திக போகப் பாசம்முற் றொழித்துப்
பாதுகாத் தருள்கடன் உனதே
பார்த்தியக் குறும்ஆன் மாக்களின் இச்சைப்
படிஎலாம் தந்தருட் பரத்தில்
சேர்த்திடும் தாய்நேர் கருணைசால் பழனிச்
சிலகிரித் தண்டபா ணியனே

(வார்த்திகம்—முதுமை கண்பார்த்து இகபோக பாசம்—இவ்வுலக இன்பங்களில் ஆசை பார்த்தியக்கு—உலகியல்மயக்கம் தந்துஅருள் பரத்தில்)

113. பூட்டணிப் பணியார் மங்கையர் களப
புளகிதத் தனமயல் அகல
மீட்டணித் தாள் துணை தருவாய்,
நாட்டணிக் கொங்க நாட்டில் மெய்ப் பத்தர்
நசைஉள மிசைஇசை இன்பத்
தேட்டமெய் வாய்த் திகழ இசைப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (59)

( பூட்டுஅணிபணி ஆர் - அணியப்படுகின்ற அழகிய ( வரிசையான எனினும் ஆம் ) நகைகளை அணிந்துள்ள. களப - வாசனைச் சாந்து பூசப்பெற்ற. மீட்டு - மீளச்செய்து. அணி கௌமாரத்தர். உள்பொலி - பெருமைக்குரிய முருகனடியார்களின் உள்ளத்தில் விளங்குகின்றதும். மெய்வீட்டு அழியாத பேரின்பத்தில் சேர்க்கின்றதும். அணி - நலம் மிக்கதும் ஆகிய. நசை உளமிசை இசை - பக்தி உள்ள நெஞ்சில் பொருந்திய. தேட்டம் - மிகுந்த ஆவல். இசை - புகழ்பெற்ற. அன்பர்களின் பக்தியின் வடிவமாகவே ஒலிக்கின்ற தோத்திரப் பாடல்களின் சங்கீதம் மிகுந்த எனினும் ஆம்.)

114. பலகலை அறிந்தும் உலகினோர் உள்ளில்
பதிதர நுவன்றிடும் திறம்ஆர்
புலவர்ஆ யினும்நின் திருவடி கருதும்
புந்திஇல் லார்க்கெது பயனே?
சலநிதி உடைஆர் புவிமகள் வதன
தாமரை பொலிஅருட் காமர்த்
திலகம்ஒத் தவிடும் மகிமைசால் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (60)

( உள்ளில் பதிதர - மனத்தில் நன்கு பதியும்படி "கற்றதனால் ஆன பயன் என்கொல்? வாலறிவன் நற்றாள் தொழாஅர் எனின்" (குறள் 2) என்பதை நினைத்து கூறியது. சலநிதி உடைஆர் - கடலாகிய ஆடையை அணிந்த. வதன - முகமாகிய. காமர் - அழகிய .)

115 பாபமும் பழியும் பொய்உல காசா
பாசமும் மோசமும் தீராச்
சோபமும் காணி கொண்டஎன் மனத்துன்
துணைஅடிக் கமலம்மெய் துவதோ ?
தாபத ருடன்பூ இசைநரர் உள்ளத்
தலம்தொறும் ஒப்பில்மா ளிக்கத்
தீபம்ஒத் திருளை விழுங்கருட் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (61)

( உலக ஆசாபாசம், அகரம் தொக்கது. சோபம் - சோர்வு. காணி கொண்ட - உரிமையோடு இடம்பெற்றுள்ள. தாபதருடன் - தாசிகளோடு. பூ இசை நரர் - உலக மக்கள். ஒப்புலகில் - நிகரற்ற. )

116. அறம்பொலி அடியார் உள்ளகக் கோயில்
அகன்றிடாத் தன்மையில் என்னுட்
புறம்பொலிந் திடக்கண் டுருகும்ஞா னாநு -
பூதிதோய் பூதிஈந் தருள்வாய் ;
மறம்பொலி கலியாம் கடையான் வலிமை
மழுங்கிட விழுங்கும்மெய் இன்பத்
திறம்பொலி அருளாட் டிசைபொலி பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (62)

( உள் அகம் - மனம், ஒருபொருட் பன்மொழி. தன்மையில் - பண்பு போல. என்உள்புறம் - அடியேனின் அகத்தும் வெளியிலும். பூதி - செல்வம். மறம் - கொடுமை. கலி - கலிபுருஷன். அருள் ஆட்டுஇசை பொலி - திருவருளாடலின் பெருமை விளங்குகின்ற. )

117. சேய்எனக் குமரன் எனஇசை நிறைதோத் -
திரம்புரி வார்எதிர் கருணைத்
தாய்எனத் தோன்றி அருள்புரிந் திடும்நின்
தண்ணருள் எண்அள வினதோ ?
நோய்என, வறுமை எனப்புகன் றுள்ளே
நுழைபவர் துயர்க்கடல் வடவைத்
தீஎனத் தீய்க்கும் மாட்சிமைப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (63)

( என் அளவினதோ - கணக்கில் அடங்குவது ஆகுமோ, ஆகாது. உள்ளே - ஆலயத்திற்குள். துயரக்கடலை வடவைத்தீயாக வற்ற வைக்கும் மாட்சிமை என்னும் உவமை நயமானது . )

118. தந்தைதாய், தாரம், மக்களை என்றும்
சதம்என நம்பிவல் வினையால்
சந்தைநேர் உலகத் தலையும்என் மனச்சஞ்-
சலம்கெட விலக்கும்நாள் சாற்றாய்;
விந்தைதோய் இடும்பன் மேல்எடுத் திடுகால்
மெய்யடி யார்வினைப் பகைதீர்
சிந்தைஒத் தசையா திசைதரும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (64)

( தாரம்— மனைவி . சதம்— நிலையானவை . சஞ்சலம் - உளைச்சல் சிவகிரி, சத்திகிரிகள் காவடியாக எடுத்து வந்து கடும்பனால் பழனியில் வைக்கப்பட்ட பிறகு எடுக்க இயலாமல் நிலைபெற்று விட்டன என்பது தலபுராணம் அடியார் உள்ளம் சற்றும் சலனமின்றி நிலையாக இருப்பது போல என உவமை)

119. துதித்திடத் துவக்கும் தொறும்எனக் குற்ற
துனைஎன முன்னகத் தவிர்ந்து
விதித்திடும் பாடல் யாருடைத் தென்ன
வினவுனர்க் கேதுரைத் திடுவேன்
மதித்திடம் பெறஉள் பதித்திடும் பத்தி
மாதவர் இனங்களை என்றும்
திதித்திட மால்போன் றுயர்ந்தவிர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே. (65 )

( துவக்கும் தொறும் - தொடங்கும் போதெல்லாம். முன்னகத்து - எதிரில். மதிதிடம் - அறிவில் நிச்சயம். தித்திட - பாதுகாத்திட தான் இயற்றும் பாடல்கள் யாவும் இறையருளால் பாடப் பெறுவதால், "அவை முருகனுடைய வாக்கே; என் செயல் அன்று" எனத்தற்போதம் நீங்கிய நிலையில் சுவாமிகள் கூறுகின்றார். "என் பாட லேஎன யான்பாடும் பாத்தொகை யாவையும் சேய் தன்பாட லேஎனச்

சாற்றுகின்றான் " ( மயிலலங்காரம் 39 ) என்னும் வண்ணச்சரபரின் வாக்கை இங்க நினைவு கூறலாம். )

120. வசை முகந் தவமே அலையும்என் சிரத்துன்
மாண்அடி சூட்டி, மெய்த் தவம்தோய்
இசைமுகந் தருட்சித் தாடிமெய் வீட்டில்
இசையுமா றுளம்உவந் தருள்வாய்;
நசைமுகந் திடும்மெய் பெறஉயிர்க் கருளி
நான்மறை முழக்கம்வாய்ந் திடலால்
திசைமுகன் புரையும் அணிபொலி பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (66)

( வசை முகந்து - பழிஏற்று. இசை - புகழ். நசைமுகந்திடும் மெய் - பக்தியாகிய நிலையான சாதனத்தை எனப் பழனிக்கும், ஆசைக்குரிய உடலை எனப்பிரமனுக்கும் சிலேடை ஆக்குக. திசைமுகன் - நான்முகன், பிரமன். புரையும் - நிகர்க்கும். )

121. கார்வதி மணிமா டத்தணி மாதர்
கணம்புரி ஏவலும் களித்தார்
சோர்வதி கம்கொண் டிறந்தகா லத்தாம்
சுகம்அல துனைக்கரு துவரோ?
பார்வதி ஆகம் கொண்டுவிண் முடியப்
பால்மதி பணிஅறு கணிந்து
சீர்வதி பேரால் பரமன்நேர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (67)

( கார்வதி - மேகங்கள் தங்குகின்ற. கணம் - கூட்டம். சோர்வு அதிகம் கொண்டு - முதுமையில். இறந்த காலத்து ஆம்-கடந்து விட்ட தம் இளமையில் அநுபவித்த இளமையில் அதிகமாக விஷயசுகத்தில் ஈடுபட்டவர்களால் முதுமையிலும் இறைவனை நினைக்க முடியாது என்பது கருத்து.

பண்டு காமர் ஆன வாறும் பாவையர் வாய் அமுதம்
உண்ட வாறும் வாழ்ந்த வாறும் ஒக்க உரைத்திருமித்
தண்டு காலம் ஊன்றி ஊன்றித் தள்ளி நடவாமுன்
வண்டு பாடும் தண்டு ழாயான் வதரி வணங்குதுமே
(பெரிய திருமொழி) 3-5)

என்னும் திருமொழி இங்கு ஒப்புநோக்கத் தக்கது பார்வதி ஆகம் கொண்டு-(சிவபெருமான்) மலைமகளை உடலின் இடப்பாகத்தே ஏற்று(பழனி) நிலத்தில் பொருந்திய உடலைப் பெற்று விள்முடி அப்பு ஆல் மதி பணி அறுகு அணிந்து--(சிவபொருமான்) புகழ்ந்து பேசுப்படும் தலையில் கங்கை நீர் (ஆல் அசை) பிறை, பாம்பு, ஆறுகம்புல் ஆகியவற்றைப் புனைந்து (பழனி) (விண்முடி) வானளாவிய சிகரத்தின் மேல் சந்திரன், பாம்புகள், யானை ஆகியவற்றைப் பெற்று சீர்வதி பேரால்--(சிவபொருமான்) சிறப்பு மிக்க சிவகிரி என்னும் திரு நாமத்தின் காரணமாக(பழனி) சிறந்த புகழால்)

122. இச்சையாம் காற்றில் இசைந்தஓர் துரும்பொத்து
எண்இலாக் காலம்மூ வுலகில்
கொச்சைஆர் பிறவி உற்றலைக் தேனைக்
கூவிஆட் கொண்டருள்; சரணம்
பச்சைமே னிவந்து வளைக்கைவாய்ந் திரத்தி
னத்தணிப் பணியுடன் கனிவாய்ச்
செச்சை தோய்ந் துமைஒத் தவிர்புகழ்ப் பழனிச்
சிவிகிரிக் தண்டபா ணியனே! (68)

( இச்சை - ஆசை. மூஉலகு - சுவர்க்கம், பூமி, பாதலம். இனி மூத்த உலகு எனினும் ஆம், இப்பொருளில் வினைத்தொகை. பச்சை மேனி வந்து - ( உமை ) பச்சை நிற உடல் அமைந்து, ( பழனி ) பச்சை - பசுமை. மேல் நிவந்து - தன்மேல் ஏறப்பெற்று. வளக்கை வாய்ந்து - ( உமை ) வளையல்களை அணிந்துள்ள கரங்களைப் பெற்று. ( பழனி ) புற்றுகளின் வரிசையைப் பெற்று. இரத்தினத்து அணிப் பணியுடன் - ( உமை ) மணிகள் இழைத்த அழகிய நகைகளுடன் ( பழனி ) மாணிக்கத்தின் அழகினைப் பெற்ற பாம்புகளுடன். கனிவாய் செச்சை தோய்ந்து - ( உமை ) வீழிக்கனி போன்ற உதடுகள் செந்நிறம் பெற்று, ( பழனி ) மகிழ்வோடு வெட்சி மரங்களை நிறையப்பெற்று. )

123. செம்பிசை களிம்பு போல்அக லாதென்
சிந்தையும் கலந்து வெம் பிறவி
வம்பிசை மூல மலப்பிணிப் பற, நின்
மான்அருள் சோதிஈந் தருள்வாய்
நம்பிக்சைச் சித்தி புத்திமெய்ப் பத்தி
நற்பணி வல்லவை கட்காம்
தெம்பிசைத் தானை முகன்நிகர் பழனிச்
சிவகிரி தண்டபா ணியனே! (69)

(களிம்பு -அழுக்கு மூலமலப்பிணிப்பு - ஆணவமாகிய கட்டு. கணபதி - நம்பு இசை சித்தி புத்தி - விரும்பப்படும் புகழைப் பெற்றுள்ள சித்திபுத்தி ஆகிய தேவியர்களுக்கும். மெய்ப்பக்தி நல்பணி வல்லவை கட்டு - உண்மையான அன்பும் நல்ல தொண்டும் வாய்ந்த வல்லமைக்கும். ஆம் தெம்பு இசைந்து - வேண்டிய ஊக்கத்தை கொடுத்து. பழனி - நம்பு இசைத்த சித்தி புத்தி மெய்ப் பத்தி நல்பணி வல்அவைகட்கு ஆம் தெம்பு இசைந்து - விரும்பப் படும் புகழ், காரிய வெற்றி, அறிவு, உண்மையான பக்தி, சிறந்த தொண்டு, அறிஞர்கள் மிகுந்த பெரிய சபைகளுக்கு வேண்டிய ஊக்கம் ஆகியவற்றை ( வரமாகக் ) கொடுத்து.)

124. ஒத்ததாம் உருவத் தினைப்படைத் தாரை
உறவெனக் கொண்டிக மாயப்
பித்தறா துழல்லே னைக்கரு ணையால்கைப்
பிடித்தடித் தவத்துறப் புரிவாய் ;
சத்தமா இசையப் புதன்மரு விரதம்
தன்மிசை வாய்த்திடப் பெற்றா -
தித்தன்ஒத் திசைவான் பொலிஒளிப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (70)

( ஒத்ததுஆம் - உறவு என. இகமாயபித்து அறா து - உலகமாயை ஆகிய அறிவு மயக்கம் நீங்காதபடி. கைபிடித்து அடித்தலத்து உற. சூரியன் - சத்தமா இசைய - ஏழு குதிரைகள் பூட்டப்பெற்ற. புதன் மருவு இரதம்தன்மிசை - அறிஞனாகிய அருணன் தேரோட்டியாகப் பொருந்தியுள்ள தேரில்.

பழனி - சத்தமாய் இசை அப்புதன் மருஇரதம் - பெரு முழக்கமாய் ஒலிக்கின்ற தண்ணீரின் மணமும் சுவையும். தன்மிசை - தன்னிடத்தில். ஆதித்தன் - சூரியன்.)

125. மருந்தியற் கவிநின் திருச்செவிக் கூட்டி,
மரணமோ மறப்பற மாற்றும்
விருந்தியற் பரமா னந்தமெய்ச் சகுணம்
விழிகொடு பருகுமா றிசைப்பாய் ;
அருந்தெய்வப் பிடிகொ டதிதியின் பாலர்க்
கருளிநன் குறக்கொடி தழவித்
திருந்தியல் நின்சா ரூபம்ஆர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (71)

( மருந்து இயல் கவி - அமுதம் போன்ற துதிப்பாடலை. விருந்து இயல் - என்றும் புதுமை மாறாத. சகுணம் - உருவத்திருமேனி. இசைப்பாய் - கூட்டுவிப்பீராக. முருகன் - அரும் தெய்வப்பிடி கொடு - அரிய தெய்வ யானையம்மையை மனைவியாக ஏற்று . அதிதியின் பாலர்க்கு அருளி - அதிதி பெற்ற மைந்தராகிய தேவர்களுக்கு அருள் செய்து. நல் குறக்கொடி தழுவி - நல்லவளாகிய வள்ளி நாயகியை அணைந்து.

பழனி - அருந்தெய்வப்பிடிக்கொடு என்பதன் பொரள் ஐயமற விளங்கவில்லை. அதிதியின் பாலர்க்கு அருளி - விருந்தினரான தன்மை உடையவர்களுக்கு ( தன்பால் உற்றவர்க்கு ) உதவி செய்து. நன்குஉற கொடி தழுவி - நன்றாகப் பலவிதமான தாவரம் கொடிகளால் தழுவப் பெற்று.)

சாரூபம் - பத முத்திகளுள் ஒன்று, யோகத்தால் கிடைக்கும் வீட்டுப்பேறு, இது இறைவனின் வடிவினனாதல்.

126. சைவம் மேல் ஓங்கும் படிதிரு ஞான
சம்பந்த னாகிஎண் ணிலர்க்கு
மெய்வழி முத்தி அளித்தநீ எனைக்கை -
விட்டனை போன்றுறநல் முறையோ ?
கைவரு மானை வளர்த்தணிச் சசியின் -
கன்ன துதிக் கைபெற விடலால்
தெய்வகுஞ் சரியை நிகர்த்திடும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே (72)

( கைவிட்டனை போன்று உறல் என்றதால் முருகப்பெருமான் தன்னைக் கைவிடமாட்டான் எனவும் அவ்வாறு தோற்றமளிக்கிறான் என்றும் கூறியவாறு.
தெய்வயானை : - கை வரும் ஆனை வளர்த்து அணி சசியின்கண் துதிக்கை பெற விடலால் - அலங்கரிப்பினை உடைய ஐராவதம் ஆகிய யானையால் வளர்க்கப்பெற்றது அழகிய இந்திராணியிடம் புகழ் அமையும்படி ஒப்படைக்கப்பட்டதால்.

பழனி :- கைவரும் ஆனை வளர்த்து - வரிசையாக வருகின்ற யானைகளை உணவூட்டி வளர்த்து. அணிச் சசியின் கண் துதிக்கை பெற விடலால் - அழகிய சந்திரனிடத்தில் தம் தும்பிக்கையை நீட்டும் படித்திரியச் செய்வதால்.)

127. ஊனமை காயப் புழைவழி ஓடி
உழலும்என் நெஞ்சைமெய் என
வானமை வழிஉய்த் திடல்உனக் கன்றி
மற்றவர் தமக்குமுற் றுவதோ ?
கானகத் திசைபுண் டரீகமேற் பாய்வார்
கட்சுதை உருவகித் திடலாய்
சேனளி னக்கண் வள்ளிநேர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (73)

( ஊன் அமை காய புழை - மாமிசத்தலான உடம்பாகிய துளை. வான் அமைவழி. உனக்கு அன்றி.
வள்ளி : - கானகத்து இசை காட்டில் வாழ்கின்றதாகிய.
புண்டரீகம்மேல் பாய் வார்கண் சுதை உருவகித்திடலால் - யானை யாகிய கஜேந்திரனின்மீது கருணை நோக்கம் செலுத்து - கின்ற வனாகிய திருமாலின் பெரிய கண்களில் தோன்றிய மகளாக வடிவம் கொள்வதால்.
பழனி :- கான் அகத்து இசை - நறுமணத்தைத் தன்பாற் பெற்ற புண்டரீகம் மேல் பாய்வார்கள் - தாமரை மலரின் மீது வடிகின்ற நீராகிய தேன். சுதை உரு வகித்திடலால் - தேவாமிர்தத்தின் பெருமையைப் பெற்றுள்ள காரணத்தால். சேல் நளினக் கண் - மீனைப் போன்ற வடிவினைப் பெற்றனவும் மென்மையானவையுமான கண்களை உடைய.)

128. ஊன்மிசை பாவ அரக்கர்கள் வளர்க்கும்
உடல்மிசை நாய்நரி இவர்ந்து
தான்மிசைந் துவக்கப் புரிதரு சித்தித்
தவப்பயன் எனக்களித் திடுவாய்,
மான்மிசை அமையும் அணிகொடு தரும
மங்கலத் தவர் அகம் புகுந்து
தேன்மிசை அளிப்பூந் திருநகர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (74)

( மிசை - உண்ணுகின்ற. இவர்ந்து - ஏறி. திருமகள் - மால்மிசை அமையும் அணிகொடு - திருமாலின் உணர்ச்சியில் பொருந்தப்பெறும் சிறப்பினைப் பெற்று, காதலிக்கப் பெறும் மேன்மை. தரும மங்கலத்தவர் - கற்புக்கடம் பூண்ட சுமங்கலிகளின், தருமபத்தினிகளின் என்றவாறு. அகம்புகுந்து - நெஞ்சில் திருக்கோயில் கொண்டு.
பழனி :- மிசை மான் அமையும் அணிகொடு - மேடான இடங்களில் மான்கள் வாழ்வதாகிய அழகினைப் பெற்று. தரும மங்கலதவர் - அறநெறியில் ஒழுகுபவர்களும் உலகத்திற்கு நன்மை செய்பவர் களுமாகிய, தவசிகள் அகம்புகுந்து - ( பழனியாகிய ) தன்பால் வந்து வழிபடுவதால் தேன்மிசை அளிபூதிரு - தேன் உண்ணும் வண்டுகள் மூசுகின்ற தாமரையில் வாழும் திருமகள்.)

129. கொடியனேன் உள்ளப் பங்கய மலரைக்
குவியஆற் றிடும்மலக் கங்குல்
விடிய,மெய்ப் பரநா தத்தணி முழக்க
விளக்கம்ஆர் கொடிஉயர்த் திடுவாய் ;
படிகமெய் மறைப்புத் தகம்கரம் தாங்கிப்
படித்தவர்க் கின்பம்ஈந் துள்ளச்
செடித்திறம் தவிர்பா ரதிநிகர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (75)

( ஆற்றிடும் - செய்கின்ற. மலக் கங்குல் - ஆணவம் ஆகிய இருள் மெய் - அழிவற்ற பரநாத -தத்துவத்தைக் கடந்துள்ள தனி - ஒப்பற்ற. முழக்கத்தை உடை கொடி சேவற்கொடி கலைமகள்: - படிகமெய் - பளிங்கு நிறத் திருமேனியில் மறைப்புத்தகம் - வேதநூல். உள்ளச் செடித்திறம் - மனத்தில் உள்ள குற்றங்களின் வலிமையை.

தவிர் - நீக்குகின்ற. பாரதி - சரசுவதி " மனக்கோட்டம் தீர்க்கும் நூல் மாண்பு" என்னும் நன்னூல்.
பழனி : கம் எய்படி என மாறுக, தன்மேல் பொருந்திய படிக் கட்டுகளையும். மறை - மான்களையும், சிலேடை நோக்கிய போலி, ர > ற. புத்து வழக்குச் சொல். கரம் - யானைகளையும், சினையாகு பெயராகத் துதிக்கையை உடைய யானையை உணர்த்திற்று. தாங்கி - தன்மேல் அமையச் சுமந்து கொண்டு. படித்தவர்க்கு - ( சரியை முதலிய ) பல்வேறு நிலைகளில் உள்ள தவசிகளுக்கு.

130. பொற்பணி உடல்மீதணிந்துகண் டுவப்பார்
போல, நின் திருவடித் தொண்டர்
சொற்பணிக் குவந்தன் னவர் அடி வனசத்
துகள்கொடு மகிழ்தவம் தருவாய் ;
கற்பக மலர்மீ தணிபெற விளங்கிக்
கலைநிறைச் சசியுடற் பொருந்திச்
செற்பரி விசைந்திந் திரன்நிகர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 76)

( பொன்பணி - தங்கநகை. சொல் பணிக்கு - கூறுகின்ற பணிவிடைக்கு. வனச அடித்துகள் என மாறுக, பாததாமரைத்துளி. இந்திரன் - கற்பக மலர் ( தன் ) மீது அணிபெற விளங்கி. கலைநிறை சசி உடல் பொருந்தி - ஒளி நிரம்பிய இந்திராணியை மணந்து. செல்பரி இசைந்து - மேகமாகிய வாகனத்தைப் பெற்று.
பழனி : கற்பக ......... விளங்கி - வானளாவி. கலை நிறைசசி. உடல் பொருந்தி - பதினாறு கலைகளால் முழுமையடைகின்ற சந்திரனைத் தன்பால் தோயப்பெற்று, இதிவும் வானளாவி என்றபடி செல்பரிவு இசைந்து - மேகங்களின் நட்பைப் பெற்று, அவை தழுவும்படி என்றவாறு.)

131. சகமிசை இருத்தும் என்னதிச் சையைநின்
தாள்துணை மீதமைத் தென்றன்
அகமிசைந் தருள வேண்டினன் ; உனக்கீது
அருமைஅன் றன் று ; மிக் கெளிதே ;
தகவிசை அள்கை ஆண்டவிர் பதும
சங்கமா நிதிமிக வாய்ந்து
திகழ்வட திசைக்கோன் நிகர்ப்புகழ்ப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (

( சகம்இசை - உலகியலில். என்னது இச்சையை. அகம் - உள்ளத்தின் கண். உனக்கு ஈது அருமை அன்று அன்று.
குபேரன் :- தகவு இசை அளகை ஆண்டு - பெருமை மிக்க அளகாபுரியை ஆட்சி செய்து. அவிர் பதும சங்க மா நிதி மிக வாய்ந்து - விளங்குகின்ற பதுமம் சங்கமம் போன்ற பெரிய நிதிகளை அதிகமாகப் பெற்று.
பழனி :- தகவு இசை அளகை ஆண்டு - கம்பீரமான ஒலியையுடைய கோழியை ( அளகு + ஐ ) தன்பால் பயிலப் பெற்று. பதும சங்க மா, நிதி மிக வாய்ந்து - தாமரை மலர்களும் சங்கினங்களும் நிறைந்த வயல்களையும், செல்வச் செழிப்பையும் அதிகமாகப் பெற்று.
வடதிசைக்கோன் - குபேரன் )

132. வேதனை தரும்பேய்த் தேர்நிகர் உலகை
விட்டுனைத் தொட்டுறும் யோக
சாதனை இலயம் கிடைத்திடும் படிஉன்
தயாளமெய்க் கடைக்கண்நோக் கிடுவாய் ;
போதமான் கொண்டம் பரத்தனைத் தறுமீன்
புணர்விழா இன்பம்ஏற் றுவந்து
சீதவான் மதிஒத் திசைதரும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (78)

( பேய்த்தேர் நிகர் - கானல் நீரைப் போன்ற. உனைத்தொட்டு - தேவரீரின் தொடர்பு கொண்டு. சாதனை - பயிற்சி. இலயம் - மனஒடுக்கம். தயாள - கருணையுள்ள.
சந்திரன் :- போது அமான் கொண்டு - தனக்குள் அடங்கியுள்ள அந்த மான் போன்ற களங்கத்தை ஏற்று. அம்பரத்து அணைந்து - வானில் பொருந்தி. அருமீன் புணர்விழா இன்பம் ஏற்று . உவந்து - அரிய விண்மீன்களை மணப்பதாகிய குறையாத காதலின்பத்தைப் பெற்று மகிழ்ந்து, அரு > அறு சிலேடை நோக்கிய போலி .
பழனி :- போதமான் கொண்டு - மிகுதியான மான்களைத் தன்பால் வகிக்கப் பெற்று. அம்பரத்து அணைந்து - வானளாவி. அறுமீன் புணர்விழா இன்பம் ஏற்று உவந்து - கார்த்திகை நட்சத்திரத்தோடு இயைந்த உற்சவத்தின் கொண்டாட்டங்களைப் பெற்றுக் களித்து .
சீத - குளிர்ந்த. வான்மதி - ஆகயத்தில் உள்ள சந்திரன் .)

133. கொன்றிட மருவும் காலனைக் குறித்துட்
கூர்ந்துநா டிலன் ; நிமிர் குன்றும்
குன்றிடப் பொன்னாட் டினன் ; எதற் கென்னிற்
கூறிடும் விடையையும் குயீறயேன் ;
கன்றியற் பாவம் களைந்திகப் பாசம்
கடக்கமெய் மாற்றிடு கையினால்
தென்றிசைக் கோன்ஒத் திசைஅருள் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (79)

( மருவும் - வந்து அடையும். உள்கூர்ந்து - மனத்தில் சிந்தித்து. குன்றும் குன்றிட - மலையும் சிறிதென்னும் அளவிற்கு மிக அதிகமாக. கறியேன் - ஆராய்ந்தேன் இல்லை. இயமன் - சிலேடையின் முதல் 5 சீர்கள் ஐயமற விளங்கவில்லை. மெய் மாற்றிடுகையினால் - ஓர் உயிர் பெற்றுள்ள உடலை மாற்றி விடுவதால், கொல்வதால். பழனி - கன் று இயல் பாவம் களைந்து - நையச் செய்யும் இயல்பினை உடைய மறச்செயல்களை நீக்கி. இக பாசம் கடக்க - உலகியல் பற்றுக்களிலிருந்து விடுபடும்படி மெய் - உண்மையாகவே. மாற்றிடுகையினால் - மா றுதலைச் செய்வதால், இனி கன் று இயல் பாவங்கள் ஐந்து இக எனப் பிரித்து நைச்செய்யும் ஐம்புலன்களால் இயற்றப்படும் தீச்செயல்களும் அழியும்படி எனினும் ஆம், ஐந்தும் என முற்றும்மை விரிக்க, தொகைக் குறிப்புப் பெயர். தென்திசைக்கோன் - இயமன்.)

134. தொழும்குணத் தவத்தொண் டடியர்உட் கருணை
சுரக்கும்நற் பணிபுரிந் தவர்தோய்
ஒழுங்குண ரேன் ; மா யையில்புழுங் கிடவே
ஒருவேன் ; வீடுகான் குவனோ ?
விழும் கண்ணீ ரால்மெய் யலம்பிவான் பூசை
விடாதிசை தருநிறம் தன்னால்
செழும்தகை வாத வூரன்நேர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (80)

( பணி புரிந்து - அவர்தோய். ஒழுங்கு உணரேன் .
மாணிக்கவாசகர் :- விழும் கண் நீரால் - பொழிகின்ற கண்ணீராலும். மெய் அலம்பி - குளித்து. வான்பூசை விடாது இசை தரும்திறம் தன்னால் - உயர்ந்த இறைவழிபாட்டை இயைீல்லாமல் செய்துவிடும் தன்மையாலும்.
பழனி :- விபம் கள் நீரால் - மலர்களிலிருந்தும் கனிகளிலிருந்தும் சொட்டுகின்ற தேன் ஆகிய திரவத்தால். மெய் - தன்டைய உடலில் அல் அம்பு இ வான் பூசை - இருள் ( மலையின் இருண்ட பகுதிகள் ) தண்ணீர், வியப்பிற்குரிய ஆகாயம் ( வானளாவிய வடிவம் ) தூசு ( பூசு + ஐ ) அணியவற்றை, இறுதியில் உள்ள இரண்டன் உருயை எல்லாவற்றோடும் கூட்டுக.
விடாது இசைதரு - தவறாமல் பொருந்தியுள்ள .)

135. புளியுறு பழம்ஒத் திவ்வினை உடற்கண்
பணூர்ந்திடா உன்அருட் புரண
வெளியுறு சகச நிட்டைவாய்த் தடியேன்
விளங்க, நின் உளம்கனிந் தருள்வாய் ;
ஒளிபொற்றா ளங்கை வரக்கொடு துதிப்பாட்டு
உலகர்உய்ந் திடஇசைத் திடலால்
தெளியருட் சம்பந் தனைநிகர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 81 )

( வினை உடற்கண் - இரு வினைகளின் விளைவாகிய உடம்பில். அருட்புரண வெளிஉறு - புரண அருள்வெளி என மாறுக. முழுமை யாகிய திருவருட்பரவெளி. சகச நிட்டை - பெருமுயற்சி இன்றி இயல்பாக மனம் இறைவனில் ஒன்றுபடும் தியான நிலை.
திருஞானசம்பந்தர் :- ஒளிர் பொற்றாளம் கைவரக்கொடு துதிப்பாட்டு உலகர் உயந்திட இசைத்திடலால் - வெளிப்படை ஒளிர் பொன்தாள் - பிரகாசிக்கின்ற ஒளியினை உடைய அருவிகளை. அங்கு ஐ வரக் கொடு -( மலை[illegible]கிய ) அந்த இடத்தில் அழகு பொருந்தும்படி அமையப் பெற்று - துதிப்பு ஆட்டு - புகழத்தக்க நீராடலை. மற்றவை வெளிப்படை..)

136. ஆண்டவன் எனல்போன் றீண்டிவன் எனும்சீர்
அறிவுகொண் டுணர்கிலர் மாயை
பூண்டவம் பினர்க்குண் புத்திமெய் ஞானம்
புலப்படு மேரிசலப் படுவார் ;
தாண்டகத் துதிப்பா வந்தமெய் யின்பத்
தனிமுதல் உறஇசைத் தலினால்
சேன்தழை நாவுக் கரசைநேர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 82 )

( ஆண்டு அவன் எனல் போல் - எல்லாவற்றையும் கடந்த அந்த முத்தி நிலையில் நாமரூபமற்ற அந்தப்பரம்பொருள் எப்படிச் சத்தியமோ அப்படி. ஈண்டு இவன் எனும் சீர் - தநு, கரண, புவன போகத் தொடர்புடைய இந்த உலகத்தில் பழனித் தண்டபாணியே உண்மை
யான கதி என்னும் சிறப்பை. உணர்கிலர் - உணராதவர்களாகி, முற்றெச்சம். புலப்படுமோ - தெரியாது என்பது கருத்து. சலப்படுவார் - அத்தகையோர் மலத்தால் வஞ்சிக்கப்படுவார்கள்.)
அப்பர் : - தாண்டகத் துதிப்பா -( தேவாரத்தின் ஆறாம் திருமுறையாகிய) திருத்தாண்டகம் என்னும் தோத்திரப் பாடல்களை. அந்த மேய் இன்ப தனி முதல் உற - தன் இயல்பாகச் சத்தியத்தையும் ஆனந்தத்தையும் பெற்றுள்ள சிவபெருமான் ஏற்றுக்கொள்ளும்படி, சத், ஆனந்தம் கூறப்பட்டதால் சித் என்பதை உபலட்சனமாகக் கொள்க. இசைத்
தலினால் - பாடிய காரணத்தால்.
பழனி :- இப்பகுதி ஐயமன்றித் தெளிவாக விளங்கவில்லை.)

137. வருத்தங்க போகத் தெனைகீது காறும்
வைத்தது போதும் ; மால் வரைமேல்
நிருத்தம்செய் கமலத் துணைத்திருப் பாத
நீழலில் வாழவைத் தருள்வாய் ;
அருத்தஞண்டர் அமிழ்தப் பாட்டணி விரவி
ஆவியோ டாக்கையும் வழங்கித்
திருத்தொண்டத் தொகைசாற் றாரன்நேர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 83 )

( வருத்து அங்க போகத்து - துன்புறுத்துகின்ற ஐம்புல இன்ப வேட்டையில். மால்வரை - பெரிய மலை.

சுந்தரர் :- அருந்து அண்டர் அமிழ்தப் பாட்டு அணி விரவி - ஊட்டுகின்ற தேவாமிருதம் போன்ற தேவாரத் திருப்பாடல்களின் வரிசை பொருந்தி. ஆவியோடு ஆக்கையும் வழங்கி - ( அவிநாசியில் முதலையுண்ட பாலகனை வரவழைக்க வற்றிப்போன குளத்துடன் முதலையால் உண்ணப்பட்டுவிட்ட சிறுவனின் உடம்பையும் அளித்து, ஆவியோடு - குளம்; உயிர் என இரட்டுற மொழிதல்.

பழனி :- அருத்து அண்டர் அமிழ்தப் பாட்டணி விரவி - செவியில் நிறைக்கின்றதாகிய தேவர்களின் அமுதம் போன்ற இசையின் சிறப்புப் பொருந்தி, மலை வானளாவி இருப்பதால் வானுலகின் இசை இங்கு காதில் விழுகிறது என்றவாறு. ஆவியோடு ஆக்கையும் வழங்கி - உயிருக்கும் உடலுக்கும் வேண்டியனவற்றைக் கொடுத்து.

திருத்தொண்டத்தொகை - பெரியபுராணத்திற்கு முதல் நூலாகிய ஏழாந்திருமுறைப்பதிகம். ஊரன் - சுந்தரமூர்த்தி நாயனார்.)

138. சகமிசை மனைவி மக்களுக் கின்பம்
சார்தர மதித்தலை வார்க்காம்
முகமன்ஒ திடவே துணிந்துனைக் கருதா
மூடனேற் குணர்வளித் தருள்வாய் ;
சுகமிசை உடலம் கொண்டுவா னிடம்சார்
துணர்புவி மீதுறச் செயலால்
சிகரியார் அருண கிரிநிகர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 84 )

( சகமிசை - உலகத்தில். சார்தர மதித்து - கிடைக்கக்குருதி. முகமன் - உபசார வார்த்தைகள். உணர்வு - நல்லறிவு. அருணகிரிநாதர் - சுகம் இசை உடலம் கொண்டு - கிளியாகப் பொருந்திய மேனியை ஏற்று. வானிடம் சார் துணர் - தேவலோகத்தில் உள்ள கற்பகப்பூங்கொத்தை. புவிமீது உறச்செயலால் - ( பிரபு - தேவராயருக்காகத் திருவண்ணாமலை ஆகிய ) நிலத்தில் வருமாறு புரிந்த காரணத்தால். சிகரிஆர் - கோபுரத்தில் வசித்த.

பழனி :- சுகம் மிசை உடலம் கொண்டு - இன்ப நிறைவும் உயர்ச்சியும் உடைய உடம்பினைப் பெற்று. அதனால். வானிடம் சார் துணர் புவிமீது உறச்செயலால் - தேவலோகத்தில் மலரும் மலர்களைத்

தன்மீது ஏந்தி நில முறச்செய்கையால். சிகரிஆர் - மலைச்சிகரங்களை உடைய..)

139. சுந்தரக் கருணைப் பவளவெற் புறழ்நின்
சோதிதோய் அணிக்குரு வடிவென்
சிந்தனை அகலா திசைந்திடும் சகசச்
சிறப்பருள் நிட்டைஈந் தருள்வாய் ;
வந்தனை புரிஆன் மாக்கள்வெம் பிறவி
வாரியை வாரிஉண் டிடலால்
செந்தமிழ்க் கலசன் ஒத்தவிர் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (85)

( சுந்தர - அழகிய. அணி - பெருமை மிக்க. சிறப்பு அருள் சகச நிட்டை என மாறுக. பிறவி வாரியை - பிறவிக்கடலை. வாரி - அள்ளி. செந்தமிழ்க் கலசன் - தமிழுக்கு இலக்கணம் வகுத்தவரும் குடத்தில் தோன்றியவருமான அகத்தியர்.)

140. மாறிடும் துன்ப மாயையின் வாயில்
மண்ணிடும் படி, உடல் உள்ளம்
ஊறிடும் பேர்அன் புதவிடக் கருணை
உளம்இசைந் தருள் ; கதி அறியேன் ;
ஏறிடும் படிமெய்க் கண்பெறக் காட்டி
இன்பவீட் டினைஉளக் கண்ணில்
தேறிடும் படிகூட் டருள்வாளப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (86)

(வாயில் மண் இடும்படி - தோல்வியுறும்படி. கதி - ( வேறு ) புகல். ஏறிடும்படி - மலையின் மேல் ஏறுதற்குரிய படிக்கட்டுகளை. மெய்க்கண் - உடம்பில் உள்ள ஊனக்கண். இன்ப வீட்டினை - பேரின்ப மயமான முத்தியை. தேறிடும்படி - உணருமாறு .)

141. மகப்பொருட் டாக உழல்குநர் உறவை
மாற்றி. ஆருயிர்இசை முத்திச்
சுகப்பொருட் டாகம் எடுத்தகெள மாரத்
தொண்டருள் இருத்தி, ஆண் டருள்வாய் ;
இகப்பொருட் போக பாக்கியம் முழுதும்
ஈந்துயிர்க் குலங்களுக் கருள்வை -
திகப்பொருட் கதியும் தரும்இசைப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 87 )

( மகப்பொருட்டாக - மக்களைப் பெறவேண்டி, அல்லது தம் மக்களின் உலகியல் உயர்வுக்காக எனினும் ஆம். முத்திச்சுகம் - வீடாகிய பேரின்பம். ஆகம் எடுத்த - பிறந்துள்ள. இகப்பொருள் - உலகியலுக்குரிய செல்வமாகிய. போக பாக்கியம் - ஐம்புலன்களால் நுகரப்பெறும் பேறுகள். வைதிகப்பொருள் கதி - வேதநெறியில் நிலையானது எனப்படும் வீட்டின்பம். பழனி இம்மை, மறுமை நலங்களோடு முத்தியும் தரும் என்றவாறு . )

142. அரட்டர்ஆ கியஐம் புலக்கொடுங் கள்வர்
ஆற்றிடும் வஞ்சக மாயப்
புரட்டற மாயப் புரட்டநின் பாதப்
புனைஅளித் தனைதரப் புரிவாய்
இரட்டலை வாரி கடைந்தெழும் அமுதம்
என்றிடா தியல்அருட் கடலில்
திரட்டமு தென்னத் திகழ்அணிப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 88 )

( அரட்டர் - தீயவர். புரட்டுஅற - பொய்மை நீங்க. மாயப் புரட்ட - அழகிய பொன்மயமான. மாயப்புரட்டு அற மாயப்புரட்ட அடி தருக என்றது நயம். புனை - தெப்பம், ஏகதேச உருவகம். இரட்டு அலை வாரி- ஒலிக்கின்ற அலைகளை உடைய கடல். திரட்டு அமுது என்ன. )

143. கருக்கடல் கூட்டும் ஆசையாம் கடலைக்
கடந்துளக் கரைஎனச் சுரம்ஆர்
இருக்கதன் முடிமீ திருக்கும்நின் திருத்தாள்
இணைமுடி சூட்டிஆண் டருள்வாய் ;
மருக்கடம் பணிநின் திருவருள் வடிவை
வள்ளிகுஞ் சரியுடன் உள்ளத்
திருக்கறத் திருக்கில் இருத்தருட் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 89 )

( கருக்கடல் - பிறவிக்கடல். உளக்கரை - ஆன்மாக்கள் ஈடேறுவதற்குரிய கரை. சுரம் ஆர் இருக்கு அதன் - இசை பொருந்திய வேதங்களின். மரு - மணம் மிக்க. கடம்பு அணி. உள்ளத் திருக்கு அற - மனத்தின் குற்றங்கள் நீங்க. திருக்கில் இருத்து - கண்களில் நிலைபெறுத்தும் .)

144. தருவிருந் தாட்சி புரிபெரு வாழ்வும்
சஞ்சலம் என்றுணர் ஞானக்
குருவிருந் தாகும் உன்அருள் மகிமை
கூர்ந்துதேர் அநுபவம் தகுவாய் ;
மருவிருந் தவக்கௌ மாரர்கள் உள்ளம்
வடிவெலாம் மணந்துதிக் திக்கும்
திருவிருந் தாகும் புகழ்அருட் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 90 )

( தரு இருந்து - கற்பக நாட்டில் ( சுவர்க்கம் ) வாழ்ந்து. குரு - பெருமை மிக்க, ஞானக்குரு விருந்து எனக்கொண்டு ஞானாசாரியனால் புதுமையாக ஊட்டப்பெறும் எனினும் ஆம். மகிமை - பெருமை. இரும் தவம் மருவு என மாறுக. பெரிய தவம் பொருந்திய. திரு - தெய்வீகமான .)

145. அரிசனம் திமிர்ந்து, பணிபல பூட்டி,
அணிஉடற் கிடும்மினார் மோகம்
புரிசன னப்பேர் ஆழிமூழ் கியது
போதும் ; மெய் அருட்டல் ஆழ்த்தாய் ;
பரிசனர் மணம்ஆர் தூமம்விண் ணவர்பால்
படர்ந்து, "நம் பரன்உலாக் காட்சித்
தெரிசனம் காண வம்" எனும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 91 )

( அரிசனம் - மஞ்சள். அணி - அழகிய. புரி - செய்கின்ற. சனனப் போழி - பிறவிப்பெருங்கடல். பரிசனர் - வந்தடைகின்ற அடியார்கள். மணம் ஆர் தூமம் - வாசனை பொருந்திய தூபப்புகை. வம் - வருவீராக)

146 நினைப்புனத் துறும்எம் அன்னைவள் ளியின்பால்
சேர்ந்தநின் தாள்மக வாம்என்
நினைப்புறில் கன்றும் என்றிசை அச்சம்
நின்புடை உறில்எவ்வா றுய்வேன் ?
நனைப்புது மலர்உன் அடிமலர்க் கமைத்து,
நாள்தொறும் சிரம்குவித் தேத்தும்
சினைக்கடம் பலர்விண் மணந்திடும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 92 )

( மகவு ஆம் - குழந்தை ஆகிய. நினைப்பு உறில் - உள்ளத்தில் பொருந்தினால் கன்றும் - ( என் மனக் குற்றங்களின் வெப்பத்தால் ) தீய்ந்து விடும். என்று - என. இசை - பொருந்துகின்ற. நின்புடை - தேவரீரிடத்து. நனை - தேன் நிறைந்த. சினை - கிளைகளோடு கூடிய. கடம்பு அவர்.)

147. பன்மயம் கவரும் படிகம் ஒத்துலகப்
பற்றினில் உற்றிழி தரும்என்
புன்மய நெஞ்சம் உன்மயம் ஆகப்
புரிசெயல் எனக்குமுற் றுவதோ
கன்மயம் ஆகும் நெஞ்செலாம் உருக்கிக்
கரைத்திடல் காட்டஅவ் வடிவாய்ச்
சின்மய மாய்ப்பின் விளங்கருட் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே!

(படிகம் - பளிங்கு. உற்று- பொருந்தி, இழிதரும் - கீழ்நிலை. அடையும் புன்மய - கீழாய். முற்றுவதோ - செய்ய இயலுவதோ, சின் மயமாய் - ஞானவடிவுடையவராக)

148. விண்ணியல் அமராக் கரியதாம் மனித
மேனிபெற் றிருந்தும் அன் பதனால்
புண்ணியத் திருத்தொண் டுனதடி யவர்க்குப்
புரிந்திலேன் உணர்வுறப் புரிவாய் ;
"எண்ணிய எண்ணி யாங்குபெற் றிடநீர்
எனைவலம் புரிமின்" என் றருள்மெய்த்
திண்ணிய அடியார்க் கூவிடும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (94)

( அமர்க்கும் அரிய எனச் சிறப்பும்மை விரிக்க. புரிந்திலேன் - இயற்றாதவனாகிய அடியேன், வினையாலணையும் பெயர். திண்ணிய - திட சித்தம் பெற்ற. )

149. அல்லுடன் பகலும் உன்திரு வடிஎன்
அகம்புறம் கண்டுநெக் குருகிச்
சொல்லுடன் பொருளும் அறும்பர சுகத்தில்
தூங்குமா றெனை அணைத் திடுவாய் ;
"புல்லுமின் ; என்னை வணங்குமின் ; உம்தாள்
பொடிகள்என் ;" என்றன் பரைஅழை பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (95)

( அல் - இரவு. பரசுகம் - பேரின்பம். "தூங்காமல் தூங்கிச் சுகம்பெறுவது எக்காலம்" என்பது சித்தர் பாடல். புல்லுமின் - (அடியார்களே! என்பால் வந்தது) கூடுங்கள் என்று அன்பரை அழை)

150. நெருப்பிசை உலகமீ துகூ டுண்டொர்
நிலைஅறி யாது,த் தளித்தும்
விருப்பிசைத் துப்பின் னும்புகப் புரி, வல்
வினைவலி யால்தளர்ந் தெய்த்தேன் ;
கருப்பிசை மாய உறுப்பிசை போகக்
கடற்கரை யாம்என உயர்ந்து
திருப்பிசை அருட்சீர் பொலிஅணிப் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! (96)

( நெருப்பிசை - தீயைப்போன்ற. விருப்பு இசைத்து - ஆசைகூறி. வல்வினை வலியால் - வலிய தீவினைகளின் ஆற்றலால். கருபிசை - பிறப்பில் சேர்த்துக்கலக்குகின்றதும். மாய - மயக்குவதும் ஆகிய. உறுப்பு இசை போக - அவயங்களால் துய்க்கப்படும் இன்பம் ஆகிய. திருப்பு - மாற்றுகின்ற .)

151. நாகம்மண் பாதலத்துடன் கொண்டு
நான்இது வரையும்எய் துற்ற
மோகமும் சினமும் தாகமும் சோக
முறையும்போ தாதுகொல்? அருள்வாய் ;
போகம்ஆர் வாஞ்சை உயிர்கள்அன் பமையப்
பொருந்திப்பின் புற்றகை மாற்றில்
தேகம்ஆ தியவும் கவர்ந்தருள் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 97 )

( நாகம் - மேல்உலகம். தனுகரண புவன போகங்களைக் கொடுத்து உலக இன்பங்களைத் துய்க்க வைத்து இறுதியில் உடல்பொருள் ஆவி ஆகிய அனைத்தையும் ஏற்றுக் கொள்வதை நினைந்து கூறியது. கைமாற்றில் - பிரதியுபகாரமாக.)

152. நாய்என உலகம் தோய்மல போகம்
நாடிமிக் கோடிமுன் காண்பார்
சீஎன வெறுக்க மெலிந்து, நின் பதமே
திக்கென அடைந்தனன் ; அருள்வாய் ;
பேய்என உயிர்கட் படுத்தும்மூ லமலப்
பிடிப்பினைப் படிப்படி யாகத்
தேய்என முடிவான் ஏற்றிடும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே ! ( 98 )

( படிப்படியாகத் தேய்என - ஒவ்வொரு படியில் ஏறும்போதும் கொஞ்சம் கொஞ்சமாக நசுக்கு என்று கூறுவது போல உயர்ந்து. திருப்பழனி மலைப்படிகளில் ஏறஏற ஆணவமலத்தின் வலிமை குறையும் என்பது கருத்து. )

153. நாள்இரை யாகப் புசித்தமை என்வாழ்
நாள்உரு வாம்உயிர் நமன்கை
வாள்இரை யாக நரகினுக் கிடும்முன்
வந்தெனை ஆட்கொள்; யீவ டாதே;
வேள்இரை யாக போகம்ஈந் திருகை
விரிக்கும்வான் அரம்பையர் களைப்புத் -
தேளிரை ஆள்வான் மேல்எழும் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (99)

( நாள்இரை - அன்றாட உணவு. வாள் இரையாக - ஆயுதத்திற்குப் பலியாக, வால் ஆயுதப்பொது. வேள் இரையாக - காமத்திற்கு இருப்பிடமாக. புத்தேளிரை - தேவர்களையும். ஆள்வான் - ஆட்கொள்வதற்காக, தற்குறிப்பேற்றம். )

154. கூறிசைந் திடும்ஐம் பூதமா னிடமெய்
கொண்டதால் பெறும்பயன் ஆம்மெய்ப்
பேறிசைந் திடநின் தாள்பிடித் தேன் ; கை
பிடித்தெனை அஞ்சல்என் றருள்வாய் ;
சேறிசைந் திடும்நீர் போல்மலக் கலக்கம்
சேர்உயிர்த் திரள்கள்நெஞ் சினுக்காம்
தேறிசைந் தருளில் தெளிவுசெய் பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (100)

( கூறு இசைந்திடும் - பகுக்கப்படும். மெய்ப்பேறு - உண்மையான பயன். இசைந்திட - பெறுவதற்காக. நெஞ்சினுக்கு ஆம் - மனங்களுக்கு உரிய. தேறு இசைந்து - தேற்றான் கொட்டையைப் போல. தெளிவு செய் - தெளிவை உண்டாக்குகின்ற. )

155. தோத்திர வாச மாலைநின் தாளில்
சூட்டடி யேன்சுகம் பொருந்த,
நேத்திர வாசம் கொண்டக லாதுள்
நிறைபரி பூரணத் தமைப்பாய்;
காத்திர வாசம் பெறஎனக் கீந்து
கண்ணினும் கருத்தினும் நிறைந்து
சேத்திரவாசம் பெற்றமை பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (101)

( தோத்திர வாசமலை - துதியாக மணமிக்க மாலைகளை. நேத்திர வாசம் கொண்டு - அடியேன் கண்களில் குடி இருந்து. காத்திரவாசம் பெற - உடலுக்குத்தேவையான உணவைப் பெறுமாறு. சேத்திரவாசம் - இருப்பிடமாக, ஒரு பொருட் பன்மொழி.)

156. சரவண பவ! சற் குருமுர! குமர!
சமரவேற் கர! சண்டு கா! நின்
குரவண வியதாட் கடைக்கலம்; வள்ளி
குஞ்சரி யுடன் வந்து காப்பாய்;
கரவண விலர்தாட் பொடிகமழ் முடியன்,
கந்தசா மிக்கவு மாரன்,
சிரவண புரத்தன், பாப்புனை பழனிச்
சிவகிரித் தண்டபா ணியனே! (102)

( சமர - போருக்குரிய. குரவு அணவிய தாட்கு - நறுமணம் பொருந்திய திருவடிகளுக்கு. கரவு அணவிலர் - வஞ்சகத்தன்மை பொருந்தாதவர் களுடைய. தாட்பொடி - பாததூளி. முடியன் - தலையினை உடையவன் ஆகிய. பாபுனை - இயற்றிய துதிப்பாடல்களை அணிந்து கொள்கின்ற.)

முற்றிற்று

----------------- * -----------------

## வாழி

157. சேவலும் மயிலும் வாழி! தென் பழனிச்
சிவகிரி வாழி! ஆ லயம்தோய்
தேவனாம் தண்ட பாணியன் வாழி!
தெரிசனர் பரிசனர் வாழி!
காவலர், அன்பர், அந்தணர், பசுக்கள்,
கார், புல வோர்கணம் வாழி!
ஆவல்மெய்ப் பயன்பெற் றுலகுயிர் எல்லாம்
அன்புடன் வாழி! வா ழியவே!

( காவலர் - ஆட்சி செய்பவர்கள். அன்பர் - பக்தர்கள். கார் - மழை. கணம் - கூட்டம். ஆவல் மெய்ப்பயன் - விரும்பிய நிலையான பேறுகளை எல்லாம். உலகு உயிர் - உலகத்தில் உள்ள உயிரினங்கள், மக்கள் மட்டும் அல்ல. அன்புடன் - தமக்குள் பரஸ்பர அன்புடனும், இறையன்புடனும் என இருவிதமாகவும் கொள்க.

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 8 | பழனியங்கிழித்தண்டப்ாணி | பழனியங்கிரித் தண்டபாணி |
| | 9 | மறையொளி | மறையொலி |
| | 16 | கொற்றலை, தின்புயமும் | கொற்றவை, திண்புயமும் |
| | 18 | கிண்கிணி சொல் | கிண்கிணி சால் |
| | 3 | ஆவல்கொண்உலர் | ஆவல் கொண்டு அலர் |
| | 5 | கிறப்பணி | சிறப்பணி |
| | 9 | அவர் | அலர் |
| | 11 | ஆட்டியும், எதிர் நிரணிறை | சூட்டியும், எதிர் நிரணிறை. |
| | 14.20 | உனக்கிடும் | உணக்கிடும் |
| | 15 | ஆழ்ந்திட | ஆழ்த்திட |
| | 16. 18 | மணக்கவின் | பணக்கவின் |
| | 18 | சேடம், படந்தால் | சேடன், படத்தால் |
| | 20 | எங்கனும் | எங்கணும் |
| | 21 | பொல்கு | பொங்கு |
| 10 | 2 | மலஙா, என் | மலர், என் |
| | 8 | லடிவோனே | வடிவோனே |
| | 10 | பழனியங்கிலி | பழனியங்கிரி |
| | 17 | கமழ்ந்திரு | கமழ்ந்திடு |
| | 21 | பழனியால்கிரி | பழனியங்கிரி |
| 11 | 1 | மெய்வ குஞ்சரி | தெய்வ குஞ்சரி |
| | 15 | இங்கலிவற | இங்களவற |
| 12 | 8 | எல்கணும் | எங்கணும் |
| | 18 | கிடைப்படும் | கிடைப்பரும் |
| | 19 | மிக்கெய்மப் | மிக்கெய்தப் |
| | 20 | கைடமமாறே | கைம்மாறே |
| | 21 | பழனியங்கிளி | பழனியங்கிரி |
| 13 | 6 | ஒத | ஓத |
| | 13 | விழுதோய் | விழிதோய் |
| | 14 | தோவணமும் | கோவணமும் |
| 14 | 2. 10 | சுலம்பும் | அலம்பும் |
| | 5 | பன் பாட | பண் பாட |
| | 6 | சுவர் பொழிய | அலர் பொழிய |
| | 20 | குளவு | குலவு |
| | 24 | திருப்பானி | திருப்பழனி |
| | 25 | மணமாகிய | மனமாகிய |
| 15 | 5 | நாராமை | நாரமை |
| | 18 | காகனம் | காகளம் |

| | | | |
|---|---|---|---|
| | 22 | அங்கவேள் | அங்கசவேள் |
| | 14 | சமயம் | சமயப் |
| | 15 | இன்ப பெருக்கு | இன்பப்பெருக்கு |
| 17 | 1 | அவல் ஆடியார்கள் | ஆவல் அடியார்கள் |
| | 2 | போன்ப | பேரின்ப |
| | 3 | தேவர்கெள | தேவர்கொள |
| | 10 | செய்வேன் | செவ்வேள் |
| | 17 | அனைத்தம் | அனைத்தும் |
| | 19 | குரணவும் | குரவணவும் |
| | 23 | சரவண வாலி | சரவணவாவி |
| 18 | 6 | செய்திகள்றமர் | செய்திகன்றமர் |
| | 8 | உக்கிரற்கனம | உக்கிரற்கமை |
| | 19 | கூர்த்த சுயில் சுயிராணி | கூர்த்த அயில் அயிராணி |
| | 22 | இன்மயன் | சின்மயன் |
| | 23 | மாலை | மாயை |
| 19 | 16 | கோகனத் | கோகனகத் |
| | 24 | கணவன்மார்களின் | கணவன்மார்கள் |
| 20 | 9 | பணித்தேத்தும் | பணிந்தேத்தும் |
| | 13 | அலைப்பழக்கம் | இலைப்பழக்கம் |
| 21 | 7 | மணிதரில் | மனிதரில் |
| | 12 | ஆட்டுக் குழந்தையை | ஆட்டுமந்தையைப் |
| | 17 | புரந்துற்ற | புரிந்துற்ற |
| 22 | 7 | பெண் அமையும் | வண் அமையும் |
| | 9 | மாதுரியம் | மாதுரியம் |
| | 12 | வன் | வண் |
| | 27 | பரித்துணர்த்தி | பிரித்துணர்த்தி |
| | 29 | தழைகர | தழைதர |
| 23 | 6 | ஆகாயமிய | ஆகாமிய |
| | 8 | பிரார்ர்த்த | பிராரத்த |
| | 10 | பவ அசலம் | பவள அசலம் |
| | 12 | கொடுத்து | கொழுத்து |
| | 16 | சொல்கடம்ப | செங்கடம்ப |
| | 23 | நினைப் | நிணப் |
| 24 | 1 | அசத்துவா | அசத்துருவா |
| | 13 | விதை மலர்த்தால் | விரைமலர்த்தாள் |
| | 19 | இந்த காரம் | அந்த காரம் |
| | 22 | திருவாள் | திருவருள் |
| 25 | 12 | புதல்வன் | புலவன் |
| | 18 | திருந்துண்டபாணி | திருந்துதண்டபாணி |
| | 21 | அமைத்தனிதில் | அமைத்தினிதில் |
| | 26 | அன்றலர்ந்தும் | அன்றலர்ந்ததும் |

| | | | |
|---|---|---|---|
| | 27 | போடன்ற | போன்ற |
| | 28 | சுற்றுகின்ற | சாற்றுகின்ற |
| 26 | 7 | கரகநாதன் | கரநாதன் |
| | 8 | கானி | கழனி |
| | 26 | விழி | வழி |
| 27 | 1 | பீ அம்போன் மலர்க்ணைகளை | பூ அம்போன் மலர்க்கணைகளை |
| | 6 | தனி | தனி |
| | 13 | மயங்கு நின்றேன் | மயங்குகின்றேன் |
| | 15 | பதித்த | பதிக்க |
| | 26 | சேன் | சேண் |
| | 30 | சேன் துலங்கம் | சேண் துலங்கும் |
| 28 | 1 | கௌமாரங்த | கௌமாரத் |
| | 16 | பாவினை | பாவவினை |
| | 18 | சிகிரி விண்ரோய் | சிகரி விண்தோய் |
| | 25 | இரந்தனைதல் | இரந்தணைதல் |
| | 30 | திருப்பானி | திருப்பழனி |
| 29 | 12 | இல கிரி | சிவகிரி |
| | 16 | உய்த்துணவின் | உய்த்துணரின் |
| | 17 | பற்றாகம் | பிற்றாகும் |
| | 19 | துளையாய் | துணையாய் |
| | 32 | இசைந்தின்மைய | இசைந்தின்பமைய |
| 30 | 10 | தேநாத | தேறாத |
| | 16 | தந்மிதயோடு | தந்தியோடு |
| | 25 | சமக்க | சுமக்க |
| | 26 | அகப்பணி | அகிப்பணி |
| 31 | 10 | மதட்பொழி | மதம்பொழி |
| 33 | 14 | கைதிறந்து | கைத்திறந்து |
| | 29 | நுறுடலை | நாறுடலை |
| 34 | 27 | சீழ் | சீர் |
| 35 | 1 | திங் நிலம் | திங்நிலம் |
| | 7 | பூந்தருள்வன் | பீந்தருள்வன் |
| | 11 | போரின்ன | போரினை |
| | 17 | குருவிடலல் | குருவிவல் |
| | 30 | தன் தேன் | தண்தேன் |
| 36 | 6 | மதித்தலேன் | மதித்திலேன் |
| | 7 | படி தொறம் | படிதொறும் |
| 37 | 3 | னாறு | னாறு |
| 38 | 17 | மனாபோல | மழை போல |
| | 20 | சீதான் | சீதரன் |
| | 24 | பிரணவத்திறனுடைய | பிரணவத்தினுடைய |
| 41 | 14 | மறைவிழி | மழைவிழி |

| | | | |
|---|---|---|---|
| 42 | 9 | நந்தனை, ஈடி | நந்தணை, ஆடி |
| | 21 | பவம் கொன்று | பவம்கொன்று |
| | 22 | அடல் வெம் | அடல்வெம் |
| 43 | 12 | மறுக | மாறுக |
| | 25 | முடிகட்டு விழா | முடிசூட்டுவிழா |
| 44 | 11 | தணி வீடு | தனிவீடு |
| | 20 | ஊற்றமையும் | ஊற்றமையத் |
| | 24 | சுற்று இயல் | கூற்று இயல் |
| 45 | 5 | காப்ணி | காப்பணி |
| | 9 | சந்சலித்திடு | சஞ்சலித்திடு |
| | 10 | அச்து | அத்து |
| | 15 | கூலி | கூவி |
| 46 | 9 | இரைகௌத் | இரைகொளத் |
| | 10 | எளதோ | உளதோ |
| | 16 | தீலாந்தரம் | தீவாந்தரம் |
| | 29 | அழக | அழகு |
| 47 | 8 | பழப்படியாக | படிப்படியாக |
| | 9 | இயம் | இகம் |
| | 18 | புலித்து | புளித்து |
| | 25 | துனர் | துணர் |
| | 26 | வாலி சூழ் | வாவிசூழ் |
| 48 | 8 | அனி | அணி |
| | 24 | நீங்கியது | நீங்கிலது |
| | 26 | கிழிந்து | கிழித்து |
| 49 | 2 | அர்தருந்தாது | அஃதருந்தாது |
| | 25 | எஃபது | என்பது |
| 50 | 26 | சுழப்பெற்ற | சூழப்பெற்ற |
| 51 | 5 | கயிலப் | கயிலைப் |
| | 7.12 | சேன் | சேண் |
| | 13 | வனாளாவும் | வானளாவும் |
| 52 | 4 | புரிவாள் | புரிவாய் |
| | 9 | இணையாது | இனையாது |
| 53 | 13 | மையினை | மையிணை |
| | 15 | அக்குகளமாரர் | அக்கௌமாரர் |
| | 26 | களித்தவள் | களித்தவன் |
| | 28 | தவக்கௌமாரர் | தவக்கௌமாரர் |
| | 29 | கைக்கௌ | கைக்கொள |
| | 16 | புழுங்கு | புழுங்கும் |
| | 20 | பிரிந்து உரை | பிரித்துஉணர |

56 மூன்றாவது வரியாகக் கீழ்க் கண்டதைச் சேர்ந்துக்கொள்க.
மீட்டணிக் கௌமா ரத்தர்உட் பொலிமெய்

| | | | |
|---|---|---|---|
| | 3 | மீட்டணி | எீட்டணி |
| | 4 | நாட்ணி, கொங்க | நாட்டணி, கொங்கு |
| | 10 | கவிப | கபை |
| | 23 | ஒத்தவிடும் | ஒத்தவிரும் |
| 57 | 4 | மெய்துவதோ | எய்துவதோ |
| | 5 | தாபதருடள் | தாபதருடன் |
| | 6 | மாளிக்க | மாணிக்க |
| | 11 | தாசிகளோடு, ஒப்பு லகில் | தவ்சிகளோடு, ஒப்பு இல் |
| | 16 | கடையாள் | கடையவன் |
| 58 | 13 | கடும்பனால் | இடும்பனால் |
| | 18 | துனை | துணை |
| | 26 | தித்திட | திதித்திட |
| 59 | 2 | இங்க | இங்கு |
| 60 | 9, 13 | சிவபொருமான் | சிவபெருமான் |
| | 10 | பேசுப்படும், தமையில் | பேசப்படும், தலையில் |
| | 11 | ஆறுகம்புல் | அறுகம்புல் |
| | 18 | உற்றலைக்தேனை | உற்றலைத்தேனை |
| 61 | 4 | மான் | மாண் |
| | 5 | நம்பிக்சை | நம்பிசை |
| | 7 | தெம்பிசைத்தானை | தெம்பிசைந்தானை |
| | 12 | கட்டு | கட்டு |
| | 13 | வல்லமை | வல்லபை |
| | 14 | நம்பு இசைத்த | நம்பு இசை |
| | 21 | துழல்லேனை | துழல்வேனை |
| | 22 | தவத்துற | தலத்துற |
| 62 | 5 | மறப்பற | டிறப்பற |
| | 9 | தழவி | தழுவி |
| | 28 | போன்றுறநல் | போன்றுறல் |
| 63 | 6 | பெற்றது | பெறு |
| | 13 | மெய் என | மெய் ஞான |
| | 17 | உருவகித்திடலாய் | உருவகித்திடலால் |
| | 20 | மாமிசத்தலான | மாமிசத்தாலான |
| 65 | 24 | இதிவும் | இதுவும் |
| 66 | 16 | பனைத்தறுமீன் | தணைந்தறுமீன் |
| | 29 | வகிக்க | வசிக்க |
| | 4 | குயீறயேன் | குறியேன் |
| | 11 | கறியேன் | குறியேன் |
| | 19 | நைச்செய்யும் | நையச்செய்யும் |
| | 26 | ஒருவேண், கான் | ஓடுவேன், காண் |
| | 28 | நிறம் | திறம் |
| 68 | 4 | இமையீல்லாமல் | இடையீடில்லாமல் |

| | | | |
|---|---|---|---|
| | 6 | விபம் | விழும் |
| | - | தன்டைய | தன்னுடைய |
| | 10 | ஆனியவற்றை, உருயை | ஆகியவற்றை, உருபை |
| | 14 | பணூப்ந்திடா | புணர்ந்திடா |
| | 17 | ஒளிபொற்றாணம் | ஒளிர்பொற்றாளம் |
| 69 | 4 | புலப்படுமேரி | புலப்படுமோ? |
| | 22 | உபலட்சனமாக | உபலட்சணமாக |
| | 24 | பக்தி | பகுதி |
| | 25 | கீது காறும் | இது காறும் |
| 70 | 24 | குருதி | கருதி |
| | 26 | பிரபு-தேவ | பிரபுடதேவ |
| 71 | 21 | டருள்வாள | டருள்வள |
| 72 | 19 | புனைஅளித்தணைதர | புணைஅளித் தணைதர |
| | 26 | புனை | புணை |
| 73 | 17 | தகுவாய் | தருவாய் |
| | 19 | திக்திக்கும் | தித்திக்கும் |
| | 30 | அருட்டல் | அருட்கடல் |
| 74 | 16 | அவர் | அலர் |
| 75 | 1 | அமராக் | அமரர்க |
| | 9 | அமர்க்கும் | அமரர்க் |

17,18 ஆவது வரிகளாகக் கீழ்கண்டவற்றை அமைத்துக்கொள்க

பொடிகள்என் முடி அமைந் திடமேல்

செல்லுமின் என்றன் பரைஅழை பழனிச்

| | | | |
|---|---|---|---|
| | 23 | த்தனித்தும் | தத்தளித்தும் |
| 76 | 4 | அவயங்களால் | அவயவங்களால் |
| | 11 | பொருந்தி | பொருத்தி |
| 77 | 4 | யீவடாதே | விடாதே |
| | 10 | வால் | வாள் |
| 78 | 9 | வாசமலை | வாசமாலை |
| | 13 | குருழுர | குருபர |
| | 14 | சண்டுகா | சண்முகா |



